அடுத்த வாரம்

# கல்கி



## பகவான் ஸ்ரீ சத்யசாயிபாபா சிறப்புப் புத்தகத்துடன் மலர்கிறது

ஆனந்தமும் அமைதியும் தரும்
அற்புத வாக்குகள் நிறைந்தது.

உங்கள் பிரதிக்குச் சொல்லி வைக்கவும்.

உள்ளே...



• மமதி

ஆங்கில வார்த்தையைத் தவறாக உச்சரிப்பது உலக மகாபாவமல்ல. ஆனால் கே.டிவியில் மறு ஒளிபரப்பாகும் 'ஆர்த்தி'யில் ஓர் எபிஸோடில் ஆளாளுக்கு 'க்ரீச், க்ரீச்', என்று குறிப்பிட்டபோது, ஏதோ எண்ணெய் போடாத கதவு திறக்கப்படுவது போல் நாராசமாக இருந்தது. குழந்தைகள் காப்பகத்தை 'க்ரெஷ்' என்றுதான் உச்சரிக்க வேண்டும் (ஆங்கிலத்தில் creche என்று எழுதினாலும்).

அதென்னவோ தெரியவில்லை, வீட்டுக்குச் சம்பந்தமில்லாத யாரோ ஒருவர் உள்ளே புகுந்து அதீதமான உரிமைகளை தான்தோன்றித்தனமாக எடுத்துக் கொள்வது 'சஹானா'வில் சகஜமாக இருக்கிறது. சக்தி, கோயம்புத்தூர் மருமகன், பென்ஷனுக்குப் போராடும் தாத்தா, இவர்கள் போதாதென்று இப்போது கஞ்சிராவை வாசித்துக் கொண்டிருக்கும் ஒருவர்! ஒய்.ஜி. மகேந்திரனை கொஞ்ச நாளாகக் காணோம். வரவர மெகாக்களில் இப்படி நடந்தால், அது கதைப் போக்கா அல்லது நடிகர் சிக்காததால் உண்டான காலத்தின் கட்டாயமா

# கோபிக்காத திம்சுக்கட்டை!

'ஹலோ தமிழா'வில் 'விஜய்'யில் சிந்தனைக்கு விருந்தாகும் கேள்விகளை மமதி சாரி அடிக்கடி எழுப்புகிறார்! உற்சாகமான சில நேயர்களும் உடனடியாக ஒரு சமூக உணர்வோடு அதில் பங்கு கொள்கிறார்கள். சமீபத்தில் அப்படிக் கேட்கப்பட்ட ஒரு கேள்வி - "நீங்கள் காதலிப்பவரை உங்கள் நெருங்கிய சிநேகிதரும் காதலிக்கிறார். நட்புக்காக காதலை விட்டுக் கொடுப்பீர்களா?'' காலை வேளைகளில் சிந்தனையைத் தட்டி எழுப்பும் சேவை வாழ்க!



என்று கண்டுபிடிப்பது கஷ்டமாகி வருகிறது.

'சின்ன பாப்பா பெரிய பாப்பா' மூன்றாவது முறையாகத் தனது முக்கிய நடிகர் பட்டாளத்தை மாற்றிக் கொண்ட பிறகு, அதன் நகைச்சுவையில் துளியூண்டு தரமாவது அதிகரித்திருக்குமோ என்று எதிர்பார்ப்பவர்களுக்கு முழு ஏமாற்றம். அதே



'செருப்பு, சொட்டைத்தலை' வசனங்கள், மற்றும் அதே காறித்துப்பல்.

'கதையல்ல நிஜம்' லட்சுமியை, ஒருவர் ஓவர்டேக் செய்யக்கூடும் என்பதை யாரும் நினைத்துப் பார்த்திருக்க முடியாது. எதிராளியைப் பேசவிடாமல் தானே பேசுவதில், இவரே வல்லவர் என நினைத்திருக்க, 'நியாயம் சொல்கிறேன்' டி.ராஜேந்தர் அவரை வாமனராக்கி விட்டார். என்றாலும் அடர்ந்த தாடியையும் மீறி நவரசங்களும் வெளிப்படுவது தனி அழகு. அடுக்குமொழி இயல்பாகக் கொட்டுகிறது. நடுநடுவே "அப்படியானால் உங்கள் குரல் மேலுலகை எட்டட்டும். அங்குள்ள கடவுளின் காதுகளைப் பிளக்கட்டும்" என்பது போன்ற நகைச்சுவை விருந்து வேறு!

கிட்டத்தட்ட ஐந்து கிலோ குறைந்து, இளம் தொப்பை மறைந்து, அழகாக டூயட் பாட வந்தால் 'திம்சுக்கட்டை' என்று கேலி செய்வது நியாயமா? ஜோதிகா விஜய்யிடம் கோபிக்கவேயில்லை, பாட்டுதான் ஹிட்டாகிவிட்டதே!

-ஆதர்ஷ்


கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24

தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

'இது இயக்குனர்களின் காலம்' என்று சொல்ல வைத்திருக்கிறார் பாலா. தங்கள் அபிமான நடிகர், நடிகையரின் பெயரைத் திரையில் பார்க்கிறபோது, கைத்தட்டி விசிலடிக்கிற அதே ரசிகர்கள்தான், இப்போது பாலாவுக்கும் அரங்கம் அதிர கரவொலி எழுப்புகிறார்கள். இதே ரகப் பாராட்டு, ஆபாசத்தைப் படையல் வைக்கும், சமகால இளம் இயக்குனர்கள் பலருக்கும் கிடைக்கவே செய்கிறது. ஆனால், இந்தக் கூட்டத்தில் தம்மை தனித்துக் காட்டிக் கொள்கிறார் பாலா. வாழ்க்கை, சினிமா இரண்டுக்குமான இடைவெளியைக் குறைக்கப் போராடும், இந்த யதார்த்தக் கலைஞனை, 'பிதா மகன்' வெற்றிக்குப் பிறகு சந்தித்தோம்!

'சேது', 'நந்தா' ஆகிய முந்தைய படங்களோடு ஒப்பிடும்போது, 'பிதாமகனி'ல் பாலாவின் பாய்ச்சல், பரீட்சார்த்த நிலைக்கு உயர்ந்திருக்கிறது. இந்த வேகம் பாராட்டத்தக்கது. ஆனால் அதிவேகம் ஆபத்தில்லையா?

தமிழ் ரசிகர்கள் மீது தைரியமாக நம்பிக்கை வைத்தால், இந்த வேகம் ஜீரணிக்கக் கூடியதுதான். உயர்ந்த ரசனை, சராசரி ரசனை என்பதில் எல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. படைப்பாளியை விடவும், வேகமாகப் பயணிக்கக் கூடியவன் இன்றைய தமிழ் ரசிகன். அவனை நான் சோறிந்துவிட விரும்பவில்லை. திரையரங்க இருக்கையில் அமர்ந்தபடி கூட்டுப் படைப்பாளியாக்கவே விரும்புகிறேன்.



**தமிழ் சினிமாவின் தரத்தை உயர்த்தப் போகிறீர்களா?**

அப்படிச் சொல்லும் அகம்பாவம் எனக்

# காதல்...

பிதாமகனில், 420 சூர்யாவை போலீசில் பிடித்துக் கொடுத்துவிட்டு, பிறகு அவரையே காதலிக்கிற பாலிடெக்னிக் மாணவி மஞ்சுவாக வாழ்ந்திருக்கும் லைலா, 'கம்பீரம்' படப்பிடிப்பில் கிடைத்தார்.

அவரிடம் கடலை கொஞ்சம். கேள்விகள் கொஞ்சம்!

**என்ன லைலா, இப்படி இளைச்சுப் போயிட்டீங்க! ஏதும் பாலே லைவ் நிகழ்ச்சி கொடுக்கப் போறீங்களா?**

என்ன கிண்டலா? மஞ்சு கேரக்டருக்காகத்தான் எடையைக் குறைச்சேன். இப்போ 'கம்பீரம்' சரத்குமாருக்காக எடையைக் கொஞ்சம் கூட்டுறேன். ஹீரோக்கள் மட்டுமில்லே, கதைக்காக இப்போ ஹீரோயின்களும் இப்படிக் கஷ்டப்படுறோம். ஆனால் பத்திரிகையிலே இதையெல்லாம் எழுத மாட்டீங்க... வருங்காலக் கணவர் எப்படி இருக்கணும்னு ஒரு கேள்வியைக் கேட்டு, பதிலையும் நீங்களே எழுதிக்கறீங்க!

**வருங்காலக் கணவர் எப்படி இருக்கணும்னு பதில் சொன்னா குறைஞ்சா போயிடுவீங்க?**

ஆமா! அப்படிச் சொல்லிட்டா லைலாவுக்குக் கல்யாண ஆசை வந்துடுச்சுன்னு எழுதுவாங்க. அப்புறம் நியாயமா எனக்கு வரவேண்டிய வாய்ப்புக்கு நானே ஆப்பு வைச்சுக்கிட்ட மாதிரி ஆயிடும். கல்யாணம் நடக்கிறப்போ நடக்கும்கிறது புரிஞ்சும் ஏன் கேட்குறாங்க!

அதுவும் என்ன மாதிரி ஒரு சின்னப் பொண்ணுக்கு இப்போ கல்யாணத்தைப் பத்தி என்ன சிந்தனை வேண்டிக்கிடக்கு.

குக் கிடையாது. ஆனால் 'பிதாமகன்' போன்ற சிறு முயற்சிகளைச் செய்ய



விரும்புகிறேன். அதற்கு ரசிகர்கள் எனக்குத் தரும் துணிச்சல், என் தன்னம்பிக்கையைக் கூட்டுகிறது. சுடுகாட்டிலிருந்து கதையைத் தொடங்குகிற தைரியத்தை அவர்கள்தான் எனக்குத் தருகிறார்கள்.

**உங்களது மூன்று படங்களிலுமே, ஏதேனுமொரு பிரதான பாத்திரம் மனச் சிதைவுக்கு ஆளான நிலையில் இருக்கிறது. இது ஏன்?**

மனச்சிதைவும், மனச்சோர்வும் ஏற்படாத மனிதனையே பார்க்க முடியாது. எல்லோரும் ஏதேனுமொரு சூழ்நிலையில் மனநிலை பாதிப்புக்கு ஆளாகிறார்கள். எல்லா மட்டத்திலுமே எனக்கு மனச்சிதைவு அதிகம் ஏற்பட்டது. இதைத்தான் எனது பாத்திரங்கள் வழியே வெளிக்காட்டுகிறேனோ என்னவோ!

**''சேது' எனது நண்பன், 'நந்தா' நான் தான்' என்றீர்கள். 'பிதாமகன்' யார்?**

முதலில் நான், அப்புறம் நீங்கள்.

**யதார்த்தத்தை அதிகம் நேசிக்கிற நீங்கள், மயானத்தில் பிறந்து வளர்கிற ஒரு மனிதனை இன்று யதார்த்தத்தில் பார்க்க முடியும் என்று நம்புகிறீர்களா?**

சித்தன் ஒரு கற்பனைக் கதாபாத்திரம் தான். ஆனால் உங்களிடமும், என்னிடமும் உள்ள குண இயல்புகளை உள்ளே பொதிந்து வைத்திருக்கிற யதார்த்தத்தின் பிரதிநிதி. எல்லோருக்குமான மொழியைப் பேசுகிறவன். அவனை எங்கும் தேட வேண்டாம். நமக்குள்ளேயே கண்டு பிடித்துக் கொள்ள முடியும். அவனை நேசிக்க முடியும்.

**'சித்தன்' பாத்திரம் பற்றிய இத்தனை விடுபடல்கள் ஏன்? மனிதாபிமானமுள்ள ஒரு மனிதரால் வளர்க்கப்படும் சித்தனிடம், ஆதிமனித உணர்ச்சி மேலோங்கி**

## பாலா – லைலா பேட்டி!

**அப்போ, காதலைப் பத்திக்கூட இந்த வயசுலே நினைக்கக் கூடாதா?**



காதலிக்கணும்னா அதுக்குன்னு நிறைய நேரம் வேணும். செல்ஃபோனுக்குக் குறைஞ்சது மாசம் பத்தாயிரம் பில் கட்ட தைரியம் வேணும். இதெல்லாம் படிச்சு சாதிக்கணும்னு நினைக்கிறவங்களுக்கு ஒத்து வராது. நான் நடிச்சு முதல்லே சாதிக்கணும்னு நினைக்கிறேன். எனக்கும் காதலுக்கும் ரொம்ப தூரம்.

**அப்போ பாலாவுக்கும் உங்களுக்கும் காதல்?**

# ...நிஜமா?

**இருப்பதற்கான காரணம் ஏன் சொல்லப் படவில்லை?**

யதார்த்த முயற்சிகளில், சொல்லும் விஷயங்களைவிட, சொல்லாமல் விட்டுவிட்டுச் செல்லும் விஷயங்கள்தான் தமிழ் ரசிகனை மேலும் உயர்த்த முடியும். சாப்பிடுகிறவனுக்கு வாழைப்பழத்தை உரிக்கத் தெரியும்.

**கதையை நம்பிப் படமெடுக்கிற நீங்கள், பிரபல நடிகர்களை வைத்துத்தானே சவாரி செய்ய விரும்புகிறீர்கள்?**

இதை நான் மறுக்கிறேன். 'சேது' படத்தில் விக்ரம் நடித்தபோது, கிட்டத்தட்ட புதுமுகம் தானே!

ராசி இல்லாதவர்கள், வெற்றி கொடுக்காதவர்கள் போன்ற மூட நம்பிக்கைகளை மிதித்துப் போட்டுவிட்டு, பல கலைஞர்களைப் பயன்படுத்துகிறேன். இவ்வளவு ரிஸ்க் எடுக்கிற நான், புதுமுகங்களை வைத்து எடுக்க மாட்டேனா? எனக்குத் தனிப்பட்ட நடிகர்கள் மீது கவனம் இல்லை. ஆர்ட்டிஸ்ட் இமேஜ் மீதும் நம்பிக்கையில்லை. கலைஞர்கள் என்மீது நம்பிக்கை வைத்து வருகிறார்கள். அதை நான் வீணடிக்க விரும்பவில்லை.

**மென்மையான நாயகனாய் இருந்த சூர்யாவுக்குள்ளிருந்து, ஒரு முரட்டு இளைஞனை வெளிக் கொண்டு வந்தீர்கள். இப்போது அபார நகைச் சுவையுள்ள நடிகனை வெளிக் காட்டியிருக்கிறீர்கள்! சூர்யாமீது ஏன் இத்தனை நாட்டம்?**

சூர்யா எனது தம்பி. எந்தக் கதாபாத்திரத்திற்கும் பொருந்தக் கூடியவர். அவரை ஆல்ரவுண்டராகக் கொண்டு வரவேண்டும் என்கிற, சின்ன சுயநலமே காரணம்.

**லைலாவையும் புதிய பரிமாணத்தில் பளிச்சிட வைத்திருக்கிறீர்கள்?**

இதுவும் இன்னொரு சுயநலம். லைலா என்ற நடிகைக்குள் ஒளிந்திருக்கும் அபாரத் திறமைகளை வெளிக் கொண்டு வரும் முயற்சி.

**விக்ரம், சூர்யா, லைலா மூவரையும் திரும்பப் பயன்படுத்துவீர்களா?**

தெரியவில்லை. ஆனால் இப்போதைக்கு ஒரு சின்ன பிரேக்.

**பாலாவுக்குத் திருமணத்தின் மீது நம்பிக்கை கிடையாதா?**

திருமணம் என்பது ஒரு சடங்கு. செட்டில்மெண்ட். பெண்களுக்கு உரிய வயதில் பண்ணி வைத்துவிடுவார்கள். எனக்கும் அதற்குரிய வயது வரும்போது கண்டிப்பாக நடக்கும் என்று நம்புகிறேன்.

**லைலாவுடன் காதல் என்று வெளியாகும் தகவல்கள் பற்றி...?**

நோ, கமெண்ட்ஸ்!

**- விஷுவல்தாசன்**

படங்கள் : **அப்பு**



நூறு சதவிகிதம் கிசுகிசு. என்னோட வளர்ச்சியில் பாலாவுக்குப் பெரிய பங்கு இருக்கு. ஒத்துக்கிறேன். எங்க நட்பு, கூட்டுக் குடும்பத்து உறவு மாதிரி. அதுலே பாசம் அதிகம். அதை ஏன் கொச்சைப்படுத்த நினைக்கிறாங்கன்னு தெரியலை. நீங்களாவது சரியா எழுதுங்க. ப்ளீஸ்!

**பாலாவின் இயக்கத்தில் நடிப்பதற்கும் மற்ற இயக்குனர்களிடம் நடிப்பதற்கும் என்ன வேறுபாடு உணர்கிறீர்கள்?**

பாலா ஒரு பர்ஃபெக்ஷனிஸ்ட்! ஒரு சின்ன ஷாட்டில் கூட காம்ப்ரமைஸ் ஆக விரும்பாதவர். அவரது இயக்கத்தில் பாத்திரமாகவே மாறி விடுகிறேன். மற்றவர்களிடம் மாற முயற்சிக்கிறேன்.

**நிஜ வாழ்க்கையில் லைலா எப்படி? இன்னொரு மஞ்சுவா?**

ஆமாம்! சூர்யா லேகியம் விற்கிற காட்சியில், அவரைத் துரத்திப் போய் போலீசிடம் பிடித்துக் கொடுப்பதைப் பார்த்துவிட்டு, அம்மா சிரித்த சிரிப்பு இருக்கிறதே... ''உன்னோட ஓபன் மவுத்துக்கு சரியான வாய்ப்பு''ன்னு பாராட்டினாங்க.

**இப்போது நடித்துவரும் படங்கள்?**

மலையாளத்தில் திலீப் ஜோடியாக வினயன் இயக்கத்தில் 'வார் அண்ட் லவ்'. படம் வெளியாகப் போகிறது. தமிழில் 'கம்பீரம்'. கன்னடத்தில் ஒரு படம்.

**- ஸ்ரீ சக்கரம்**

அட்டை, படங்கள் : **சங்கர் சத்தியமூர்த்தி**



**பித்ரு தோஷ நிவர்த்தி வம்ச விருத்திக்கு வழிகாட்டும்!**

**தடைப்பட்ட திருமணம், பிள்ளைப்பேறு, கடன் தொல்லை நீங்கி ஆயுள் விருத்தியாக**

# பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில் அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். திருமாலின் அவதாரங்களான ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலனை கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை,பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

## நீங்கள் நினைக்கும் நாளில் இராமேஸ்வரத்தில் அன்னதானம்!

இராமேஸ்வரத்தில் நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்வதற்கு எமது அறக்கட்டளை சிறப்பான ஏற்பாடுகள் செய்துள்ளன. ஆகவே, நீங்கள் நினைக்கும் தேதியில் இராமேஸ்வரத்தில் அந்தணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழை எளியவர்களுக்கும் அன்னதானம் செய்யலாம். ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

# கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎: (044) 24900303, 24900603, 24416122 Fax: (044) 24916316**

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

‘அதெப்படி...? ஐம்பதாயிரம் பரிசு அறிவித்துவிட்டு அதை ஒரு மாவட்டத்து வாசகர்களுக்கு மட்டுமே தரலாம்! மற்ற மாவட்டக்காரர்களுக்கு எப்போது?’

‘தமிழகத்துக்கு வெளியே உள்ளவர்கள் உங்களுக்கு வாசகர்களாகத் தெரியவில்லையா...!’ என்றெல்லாம் கோபக் கணைகள் தொடுக்கும் வாசகர்களிடமிருந்து தப்பிக்க, இதோ போட்டியை விஸ்தரித்துவிட்டோம். அனைத்து வாசகர்களும் பங்கேற்கலாம்.

இந்த இதழ் மதுரைச் சிறப்பிதழ்களில் ஒன்று என்பதால், மதுரை நகர் பற்றிய ஒரு கேள்வியும் இடம் பெற்றுள்ளது. மற்ற கேள்விகள் பொதுவானவை.

வாரந்தோறும் பரிசு : ரூ.10,000!

# ஆ ஹா! ரூ. 10,000 பரிசு!



# வாசகர்கள் அனைவருக்குமே

இந்த வாரம் ஆறுதல் பரிசுகளாக 20 பேருக்கு வெள்ளி காமாட்சி விளக்குகள்.

நீங்கள் செய்ய வேண்டிய தெல்லாம் இதுதான்.




கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி, நவம்பர் 22ஆம் தேதிக்குள் அனுப்புங்கள்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய கல்கி வாசகர் ஒருவருக்கு, ரூ.10,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதில்களை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- இப்பரிசுத் தொகை வருமானவரி விதி முறைகளுக்கு உட்பட்டது.
- கல்கி வாசகர்கள் எங்கிருந்தாலும் இதில் பங்கேற்கலாம்.
- உறையின் மீது 'ஆஹா! ரூ.10,000' என்று குறிப்பிட வேண்டும்.
- விடைகள் 22.11.2003க்கு முன்ன தாக வந்து சேர வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்பட மாட்டாது.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

## ஆஹா! ரூ.10,000 பரிசு!

## குவிஸ் போட்டி கூப்பன் - 1

1. மதுரை மீனாட்சிக்கு முடிசூட்டு விழா ........................ மாதத்தில் நடைபெறுகிறது.
2. ஒலிம்பிக் சின்னத்தில் ........................ வளையங்கள் உள்ளன.
3. ஆப்பிரிக்க - ஆசிய விளையாட்டுப் போட்டி (2003) பதக்கப்பட்டியலில் இந்தியா ........................ வது இடத்தைப் பிடித்துள்ளது.
4. ஹாலிவுட்டில் ஆஸ்கர் பரிசை இதுவரை அதிகமுறைகள் வென்ற படத் தயாரிப்பு நிறுவனம் ........................
5. 1997-ல் பாரத ரத்னா விருது பெற்ற இந்திய விஞ்ஞானி ........................
6. கடந்த வாரத்தில் நெருக்கடி நிலை அறிவிக்கப்பட்ட நாடு ........................

# கல்கி வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி



• 'இந்து' அலுவலகம் முன்பு

சட்டப் பேரவையின் உரிமைக்குழுவின் பரிந்துரையின் பேரில், 'இந்து' மற்றும் 'முரசொலி' பத்திரிகையாளர்களுக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது கொடுமையிலும் கொடுமை.



• சந்துரு

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் நாடாளுமன்றங்களுக்கும் சட்டப் பேரவைகளுக்கும் உள்ள உரிமைகளைப் பற்றி தெளிவாகக் குறிப்பிடப்பட வில்லை. இவ்வமைப்புகளின் உரிமைகள் பட்டியல் உருவாகும்வரை, இங்கிலாந்து பாராளுமன்றத்தில் கடைப்பிடிக்கப்படும் உரிமைகளும், சலுகைகளும், கடைப் பிடிக்கப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

ஆனால் ஐம்பத்து மூன்று ஆண்டு களாகியும் நமது சட்டப் பேரவைகள் தங்களது அதிகாரங்களையும், உரிமை களையும், சலுகைகளையும் வரை

# "கொடுமையிலும் கொடுமை!"

- மூத்த வழக்கறிஞர் சந்துரு

# நவம்பர் 7 நிகழ்வுகள்...

யறுத்துப் பட்டியலிடவில்லை.

பாராளுமன்ற, சட்டமன்ற உரிமைகள் என்னென்ன என்பதைத் தெளிவாக வரையறை செய்ய, நாம் இயக்கம் நடத்த வேண்டும்.

எப்போதெல்லாம் தனி மனித சுதந்திரம் சட்டத்தை மீறி பாதிக்கப்படுகிறதோ, அப்போதெல்லாம் அபயம் அளிப்பது நீதிமன்றங்கள் தாம்.

'ஆனந்த விகடன்' ஆசிரியர் மீது நடந்த உரிமைப் பிரச்னை வழக்கில் "வானளாவிய அதிகாரம் இந்தியாவில் எந்த அமைப்புக்குமோ, அல்லது பெரிய பதவி வகிக்கும் தனி நபர்களுக்கோ கிடையாது என்றும், தனி நபர் சுதந்திரம் பாதிக்கப்படும்போது, நீதிமன்றம் தலையிட்டு மறுபரிசீலனை செய்ய முழு அதிகாரம் உண்டு" என்றும் சென்னை உயர்நீதிமன்றம் சொல்லியிருக்கிறது.

அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசியல் சட்டத்தில் தனிமனிதனுக்கு உள்ள கருத்து உரிமையைத் தவிர, பத்திரிகைகளுக்கும் தனி உரிமைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. தற்போது தமிழகத்தில் நடைபெறும் சம்பவங்கள், இந்திய அரசியல் சட்டத்திலும் அதேபோல் குறிப்பிடப்பட வேண்டும் என்பதையே காட்டுகின்றன.

# "அரசியல் சட்டத்துக்கு முரணானது"

**- வழக்கறிஞர் விஜயன்**

ஆட்சி என்பது, சட்டமன்றம், அமைச்சரவை, நீதிமன்றம் மட்டுமே அல்ல. ஜனநாயகத்தில் மக்களின் கருத்துக்களைப் பிரசுரிக்கும் பத்திரிகைகளும், தொலைக் காட்சிகளும், முக்கியப் பங்காற்றுகின்றன.

உரிமை மீறல் தண்டனைக்கு ஓரளவு ஒப்பான நீதிமன்ற அவமதிப்பு வழக்கில், இங்கிலாந்து நீதிபதி லார்ட் டென்னிங் சொன்னார்: ஒருவர் நீதிமன்றத்தைப் பற்றிக் கூறிய கருத்துக்காக, எங்களது அவமதிப்பு நடவடிக்கை அதிகாரத்தை பிரயோகிக்க மாட்டோம். எங்கள் கௌரவம் எங்கள் அதிகாரத்தில் இல்லை. அது வேறு நிரந்தரச் செயல்பாடுகளில் உள்ளது. ஏனென்றால், கருத்துச் சுதந்திரம் என்பது எங்கள் அதிகாரம் மற்றும் கண்ணியம் ஆகியவற்றை விட உயர்ந்தது.



* விஜயன்

உரிமை மீறல் என்பது வரையறுக்கப்பட்ட சட்டம் அல்ல. மரபு சார்ந்ததே! ஒரு முறையான சட்டம் இல்லாத நிலையில், உரிமை மீறல் குற்றத்தை ஒருவர் மீது சுமத்துவதும், கமிட்டி போட்டு தண்டிப்பதும், அரசியல் சட்டத்துக்கு முரணானது. யதேச்சதிகார நடவடிக்கை இனியும் தொடராமலிருக்க வேண்டுமானால், உரிமை மீறல் சட்டம் உடனடியாக வரையறுக்கப்பட வேண்டும்.

சந்திப்பு : **ப்ரியன்**





# "போர் வெடிக்கும்"

## -கமல் கர்ஜனை!

''முதல்வரின் வேண்டுகோளை ஏற்று மக்களுக்காக 'சண்டியர்' டைட்டிலைக் கைவிட்டேன்'' என்று மொட்டைத்தலை, முறுக்கு மீசை சகிதம் பேச ஆரம்பித்தார் நாற்பத்தொன்பது வயது கமல். ''பிறந்த நாளும் அதுவுமாக, புது டைட்டிலை அறிவிக்கப் போறார்ப்பா'' என்று 'கப்சிப்' அமைதி காத்தது பத்திரிகையாளர் கூட்டம்.

'''கமல் 2004' என்று வைத்துவிட நினைத்தேன். இப்படி வைத்தால் என் அப்பாவைத் தவிர யாரும் எதிர்க்க முடியாது. ஆனால் இதில் கோபம்தான் தெரிகிறதே தவிர விவேகம் இல்லை. எனவே படம் வெளியாவதற்கு ஒரு மாதம் முன்பு புதிய டைட்டிலை நிச்சயம் அறிவிப்பேன்'' என்றார்.

''மண்ணும், மக்களும் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் கதை நடக்கும் ஊரிலேயே படப்பிடிப்பை நடத்த விரும்பினேன். ஆனால் முடியவில்லை. இப்போது கொஞ்சம் அதிகச் செலவில் இங்கேயே எடுத்துவிட்டேன். சென்னையில் எடுத்த படம் என்று நானே சொன்னால் கூட நம்ப மாட்டார்கள்'' என்று சிலாகித்துச் சொன்ன கமல், படத்தை பொங்கல் பண்டிகைக்கு வெளியிடப் போகிறாராம்.

அங்கே சுற்றி, இங்கே சுற்றி, திரும்பவும் கிருஷ்ணசாமியைப் பற்றிக் கேள்விகள் குவிந்தன.

''நான் அரசியலில் இல்லை என்பதைக் கடந்த இருபத்தைந்து வருடமாக நிரூபித்து வந்திருக்கிறேன். என் வாழ்க்கையில் நடந்த பல விஷயங்களைத் துணிச்சலாக ஒப்புக்கொண்டிருக்கிறேன். எனது டைட்டிலைப் பறித்ததுபோல், எனது படத்தின் கருத்தைப் பறிக்க முடியாது. கண்டென்ட்டை மாற்று என்று சொன்னால் போர் வெடிக்கும். சாலையோரப் பலகைகளில் மட்டும் ஜாதிப் பெயரை நீக்கிவிட்டால் போதுமா? இந்தச் சுதந்திரப் பறிப்பு என்பது கருத்துச் சுதந்திரத்துக்கு எதிரானது'' என்று கொதித்தார் கமல்.

''தமிழ் சினிமா பூத்துக்கு மாறிவிட்டது என்று எல்லோரும் சொல்வதை ஒப்புக் கொள்கிறீர்களா'' என்று ஒருவர் கேட்க, ''ஒப்புக் கொள்கிறேன். ஆனால் பூத்துக்கு ஐம்பது வயதாகக் கூட இருக்கலாம் இல்லையா?'' என்று குறும்பாகச் சொல்லி கலகலக்க வைத்தார்.

அடுத்த படத்துக்கு 'கிருஷ்ண லீலா' என்று தலைப்பு வைத்திருக்கிறாராம். கவனிக்க : இது அயோத்திப் பிரச்னை சம்பந்தப்பட்ட கதை அல்ல!

- ஸ்ரீ




## சந்திரிகா சர்வாதிகாரியா..?

'சிறுத்தைப் புலி தன் உடலில் உள்ள புள்ளிகளை உதிர்த்துவிடாது' என்று ஓர் ஆங்கிலப் பழமொழி உண்டு. விடுதலைப் புலிகளின் வன்முறை கலந்த பிரிவினைவாத அணுகுமுறையும் அப்படிப்பட்டதுதான். துளியும் மாறாது. இதற்குச் சான்றாக அமைந்திருப்பது, நார்வே அரசு மூலம் இலங்கை அரசுக்குப் புலிகள் சமர்ப்பித்துள்ள அமைதி ஒப்பந்தத்தின் வரைவு. அதன்மூலம் பிரபாகரன் குழுவினர் விழைவது, ராணுவ அதிகாரம் உட்பட அனைத்து அதிகாரங்களும் படைத்த வடகிழக்கு மாநிலத்தின் தனி அரசு. இவ்வரசில் இலங்கை அரசின் பிரதிநிதி ஒருவர் இடம் பெறுவார் என்பதற்கு மேலாக எந்தவொரு தொடர்பும் மைய அரசுடன் இராது.

நீண்ட நெடு நாட்களாக அமைதிப் பேச்சு வார்த்தை நடத்திவிட்டு, இம்மியளவும் தங்கள் நிலையில் விட்டுக் கொடுக்கவில்லை விடுதலைப் புலிகள். நார்வே பிரதிநிதிகளுக்கும் இலங்கை அரசுக்கும் 'பெப்பே' காட்டிவிட்டு, வடகிழக்கு மாநிலத்தில் ஒரு முழுமையான ராணுவ ஆட்சியை நிறுவுவதற்குண்டான ஏற்பாடுகளைச் செய்து வந்திருக்கின்றனர்.

அமைதிப் பேச்சு வார்த்தைகள் முறையாக நடைபெற வேண்டும், நாட்டில் பல ஆண்டுகளாகக் குலைந்துபோய்க் கிடக்கும் அமைதி திரும்ப வேண்டும் என்கிற நோக்கில், இலங்கைப் பிரதமர் ரணில் விக்ரமசிங்கே புலிகளுக்கு நிறையவே விட்டுக் கொடுத்தும், வளைந்து கொடுத்தும் வந்திருக்கிறார். இதனாலெல்லாம் எவ்வித நற்பயனும் விளையவில்லை



கல்கி



2003 நவம்பர் 16
சுபானு ஐப்பசி 30
மலர் : 62
இதழ் : 16

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




என்பதை உணர்ந்துதான், இலங்கை அதிபர் சந்திரிகா குமாரதுங்கா தமது அதிகாரங்களைப் பயன்படுத்தி ரணில் அமைச்சரவையின் இயக்கங்களை முடக்கியிருக்கிறார். ராணுவம், உள்துறை, வெகுஜன தொடர்புத் துறை ஆகிய மூன்றையும் தமது கட்டுப்பாட்டில் எடுத்துக் கொண்டதுடன், அவசர நிலையையும் பிரகடனம் செய்திருக்கிறார்.

ரணில் விக்ரமசிங்கே அமெரிக்காவுக்குச் சென்றுள்ள நேரத்தில், சந்திரிகா இவ்வாறு திடுதிப்பென்று செயல்பட்டது அத்துமீறல் என்றும், அவர் யதேச்சாதிகாரப் போக்குடையவர் என்றும் விமர்சனங்கள் எழுந்துள்ளன. அறிவிக்கப்பட்ட அவசர நிலை கையெழுத்திடப்படவில்லை என்று சற்றே பின்வாங்கினாலும் சந்திரிகா குறித்த விமர்சனங்கள் நியாயமானவையே.

ஆனால், இலங்கையின் நிலைமையை நாம் கூர்ந்து பார்க்க வேண்டும். குட்டி நாடு. அமைதி நிலவ வேண்டும் என்ற நோக்கில் பிரதமர் விட்டுக் கொடுக்கும் மனத்தினராக இருக்கிறார். அவர் சம்மதித்துவிட, நாட்டின் முக்கியமான, வளமான பகுதி பிரிவினைக்கு உட்பட்டு பிரபாகரனின் ராணுவ ஆட்சியின்கீழ் வந்துவிட்டால், எத்தகைய தலைவலிகள் தொடரும்...! வடகிழக்கில் அமைதியும் ஜனநாயகமும் நிலவும் என்பதற்கு உத்தரவாதம் கிடையாது. இலங்கை அரசுக்கு அபாயமும் அச்சுறுத்தலும் தொடராது என்பதற்கும் உத்தரவாதம் கிடையாது.

'இதுவரை வன்முறையைக் கையாண்டதற்காக வருந்தவில்லை ; வன்முறையைக் கைவிடும் உத்தேசமே இல்லை' என்று கூறியதுடன் வன்முறையில் தாம் நம்பிக்கை கொள்வதாகவும் பிரபாகரன் பட்டவர்த்தனமாகப் பல சந்தர்ப்பங்களில் தெரிவித்துள்ளார். இதன் பிறகு அவர் தலைமையிலான ஒரு தனி நாடு அமைவதற்கு விட்டுக் கொடுப்பது அமைதியைப் பெற்றுத் தராது. துன்பத்தையும் கண்ணீரையுமே பெருக்கும்.

இதைவிட முக்கியமான அடிப்படை விஷயம், கேக் வெட்டுவது போல் நாட்டைத் துண்டுபோட்டு பிரபாகரனிடம் சமர்ப்பிப்பதா என்ற தன்மானப் பிரச்னை. அது தேசத்துக்கே இழுக்காகக் கருதப்படுவது ஆச்சர்யமில்லை.

இந்த அச்சுறுத்தலான சூழலில் ரணில் அரசு, இலங்கை உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி அதிபர் சந்திரிகா ஆகிய இருவர் மீதும் குற்றம் சுமத்தி, கண்டனத் தீர்மானம் கொண்டுவரத்




திட்டமிட்டது.

முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக, சந்திரிகா அவசர நிலை பிரகடனம் செய்திருப்பதில் யதேச்சாதிகாரக் கலப்பிருப்பினும் அதை நாம் முற்றிலும் குறை கூறிவிட முடியாது.

அரசியல் ரீதியில் ரணில் விக்ரம சிங்கேயும் சந்திரிகாவும் எதிர்ப்பாளர்கள் என்பதால், இந்தச் சந்தர்ப்பத்தில் ஒருவரை ஒருவர் மிகுதியாகக் குறை கூறிக் கொள்கிறார்கள் ; வார்த்தைத் தாக்குதல் நடத்துகிறார்கள். அவ்வாறு செய்யும்போதே அவர்கள் புலிகள் விரித்த வலையில் தலைகுப்புற விழுகிறார்கள் என்பதுதான் மிகப்பெரிய சோகம்.

தங்களது வரைவுத் திட்டம், இலங்கை அரசியல் சூழலில் எத்தகைய சலசலப்பைக் கிளப்பும் என்பதை ஓரளவு எதிர்பார்த்து புலிகள் தயாராகியிருப்பார்கள். சந்திரிகாவின் அடக்குமுறை குறித்துப் பிரசாரம் செய்து, தங்கள் தரப்புக்கு நியாயம் தேடிக் கொள்ள முயற்சி செய்வார்கள்.

இதற்கிடையே இலங்கைத் தமிழனின் துயரம் தீரப்போவதில்லை. பிரபாகரன் தலைமையில் தனி நாடு பெற்றாலும் அது ராணுவ ஆட்சியே. இலங்கைத் தமிழர்களுக்கு ஜனநாயக உரிமைகள் கிட்டாது. இலங்கை அரசின் ஆளுகையின் கீழ் இருந்தபடி உரிமைகளை வெல்வதுதான் உண்மையான வெற்றியாக அமையும். தங்கள் உழைப்பையும் வியர்வையையும் தலைமுறை தலைமுறையாகச் சிந்திவரும் தமிழர்கள், சிங்களவர்களுக்கு இணையாகச் சம உரிமைகளைப் போராடிப் பெறுவதுதான் பெருமை. தனியே முறித்துக் கொண்டு போவது, அவர்களை மேலும் தனிமைப்படுத்தி துன்பங்களைத்தான் பெருக்கும்.

சிறுபான்மை என்ற அந்தஸ்திலிருந்தபடி சிறப்பு உரிமைகளும் தனி அந்தஸ்தும் கோருவதை விடுத்து, பெரும்பான்மையினருடன் சம உரிமை கோரும் புதிய தமிழர் இயக்கம் இலங்கையில் பிறக்க வேண்டும். அது அரசுடன் தர்க்க ரீதியாகவும் தார்மிக ரீதியாகவும் மோதி வெற்றிபெற வேண்டும்.

வன்முறையின் ஆற்றல் மீது தமிழர் கொண்ட மயக்கம் தெளிய ஏற்ற தருணம் இது.

இலங்கை அரசாங்கமும் அதிகார மையமும் அரசியல் வேறுபாடுகளைக் களைந்து, புதிய நோக்கில் ஒன்றுபட்டு பிரச்னையை அணுகித் தீர்க்க வேண்டிய சமயம் இது. ●

# நடக்குமென்பார்; நடக்கும்!

நவம்பர் 12 முதல் 18 வரை / அக்னிசர்மா பக்கம்



துலாம் ராசிக்காரரான மதன் பாப்பின் குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும்!

**மேஷம் :** பண நடமாட்டம் தாராளமா இருக்கும். புனித காரியங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். புதிய முயற்சிகள் கைகூடும். அரசியல்வாதிகளுக்குத் திடீர் அதிர்ஷ்டம் இருக்கு. குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்புத் தேடி வரும்.

**ரிஷபம் :** எந்தக் காரியத்தை எடுத்தாலும் நன்மைதான். வெளிநாடுகள்ல இருந்து நல்ல தகவல் வந்த சேரும். வீண் வாக்குவாதங்கள்ல இறங்காதீங்க. கடன் தொல்லை படிப்படியா குறைந்து மனசுல பால் வார்க்கும். பெண்களுக்கு லாபகரமான வாரம்.

**மிதுனம் :** இதுவரை தாமதமாகி வந்த விஷயங்கள் இப்பப் பட்டுனு நிறைவேறும். அலுவலகத்தில் நீங்க வைக்கிற கோரிக்கைகள் நிறைவேறும். வரவேண்டிய பணம் வந்து சேர்ந்து நிம்மதி தரும்.

**கடகம் :** இந்த வாரம் எதிர்பாராத பயணம் இருக்கு. வேலை செய்யும் இடத்தில் சிறுசிறு பிரச்னைகள் வரலாம். புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடறது நல்லது. சிலர் புதிய வீடு, வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு.

**சிம்மம் :** இந்த வாரம் முக்கியமானவங்க அறிமுகம் கிடைக்கும். மேலதிகாரிகளிடமும் சுற்றத்தாரிடமும் சுமுகமாகப் பேசிப்பழகுவது நல்லது. வரவேண்டிய பணம் வந்து சேரும். குடும்பத்துல இதுவரை இருந்துவந்த கருத்து வேறுபாடுகள் மறையும். சுபகாரிய முயற்சிகளுக்கு வாய்ப்பிருக்கு.

**கன்னி :** எதிர்ப்புகள் மறையும். கல்வி, கேள்வி ஆராய்ச்சிகளில் முன்னேற்றம் உண்டு. எவ்வளவு சிக்கலான காரியத்தையும் சாதுர்யமா முடிச்சிடுவீங்க. புதிய முயற்சி கைகூடும். பெண்களுக்கு எதிர்ப்புகள் குறையும்.

**துலாம் :** இதுவரை விரோத மனப்பான்மையோடு இருந்தவங்க மனந்திருந்தி வருவாங்க. கடன் தொல்லைகள் குறையும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்புத் தேடி வரும்.

**விருச்சிகம் :** புதியவங்க அறிமுகம் கிடைக்கும். அவங்களால நன்மை உண்டு. வேலை விஷயத்தில் ரொம்ப கவனமா இருங்க. பேச்சில் நிதானம் அவசியம். எதிர்பார்த்த நல்ல தகவல் வந்து சேரும்.

**தனுசு :** பண நடமாட்டம் தாராளமா இருக்கும். பயணங்களால் நன்மை உண்டு. முக்கியமானவங்களோட பாராட்டு கிடைக்கும். வேலை விஷயமா சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு.

**மகரம் :** இந்த வாரம் எல்லா வகையிலும் உங்களுக்கு நன்மை உண்டு. உத்தியோகத்தில் மகிழ்ச்சியான சூழல் நிலவும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கும். பொருளாதாரச் சிக்கல் விலகும்.

**கும்பம் :** இதுவரை இருந்து வந்த குறுக்கீடுகள் மறையும். எதிர்பார்த்த பண உதவி வந்து சேரும். கையிருப்புக் கூடும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் சுபமங்கள காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு.

**மீனம் :** எதிலும் கவனம் தேவை. வீண் வாக்குவாதங்கள் வேண்டாம். முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட பழகும்போது எச்சரிக்கை தேவை. புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடுங்க. செலவு கட்டுக் கடங்காது. குடும்பத்துல சிறுசிறு பிரச்னைகள் ஏற்படும்.

# புதுப்பேட்டை பிரம்மா!



* கதிர்

"ஆஞ்சநேயர் சஞ்சீவி மலையைப் பேத்து தூக்கியாந்த மாதிரி, நம்ம புதுப்பேட்டைய அச்சு அசலா அப்படியே பேத்துகினு வந்து படம் புடிச்சிருக்கானுவப்பா!'' தியேட்டரிலேயே வாய் பிளந்து பாராட்டுகிறார்கள் ரசிகர்கள். மணிரத்னத்தின் 'பம்பாய்', 'நாயகன்' படங்களுக்குப் பிறகு யதார்த்தமும், பிரம்மாண்டமும் கலந்து 'திருமலை' படத்தில் காயலான் கடைகளின் கோட்டையான புதுப்பேட்டை ஏரியாவை, கலை நிர்மாணம் செய்திருக்கும் கதிருக்குத்தான் இந்தப் பாராட்டு.





* புதுப்பேட்டை செட்

'திருமலை' படத்தின் கதைப்படி விஜய் மெக்கானிக். புதுப்பேட்டை ஏரியாவுக்கு அவர்தான் செல்லப்பிள்ளை. கதையின் பெரும்பகுதி புதுப்பேட்டையில் நகர்வதால், இந்த செட்டை ஐம்பது லட்சம் செலவில் முந்நூறு பேர் உழைப்பில், நாற்பதே நாட்களில் உருவாக்கினார்களாம். 'செட் ப்ராப்பர்ட்டி' எனப்படும் பழைய தட்டுமுட்டுச் சாமான்கள் அத்தனையையும், புதுப்பேட்டையிலிருந்து பத்து லட்ச ரூபாய் வாடகைக்குப் பிடித்து வந்திருக்கிறார்கள்.

"'சாமி' படத்துக்காக திருநெல்வேலி மார்க்கெட் செட் ஒன்றைக் கும்பகோணத்தில் போட்டோம். ரொம்பத் தத்ரூபமாக இருந்ததாகப் பாராட்டினாங்க. அந்த உழைப்புக்குக் கிடைச்ச அங்கீகாரம்தான் 'திருமலை' வாய்ப்பு'' என்று சொல்லும் கதிர், சென்னை எழும்பூர் நுண்கலைக் கல்லூரியின் மாணவர். தோட்டாதரணி ஜே.கே.யிடம் உதவியாளராக இருந்தவர்.

"கதைக்கு என்ன தேவையோ, அதை ஒரு நூல் கூடத் தவறாமப் பண்றதுதான் கலை இயக்கம். சொல்லப்போனா, ஹாலிவுட் ஆட்களுக்கு சவால் விடற மாதிரி டெக்னீஷியன்கள் நம்ம ஊர்லேயே இருக்காங்க. அதற்கான தேவையும், வாய்ப்பும் கிடைக்கிறதில்லே, அவ்வளவுதான்'' என்றவருக்கு 'திருமலை' செட்டைப் பார்த்துவிட்டு சாபுசிரில் ஃபோன் செய்து பாராட்டியது, விருது வாங்கிய பெருமை தந்ததாம்!

- ஸ்ரீசக்கரம்

# சர்ச்சில் குடி புகுந்த பிள்ளையார்!

எந்தவிதமான அராஜகமோ, இடிப்போ இல்லாமல் சர்ச் ஒன்று, விநாயகர் கோயிலாகியிருக்கிறது. எங்கே? நம்ம ஊரில் இல்லை, ஆஸ்திரேலியாவில்.

மெல்போர்ன் ஈழத் தமிழர்களும், இந்தியத் தமிழர்களும் வக்ர துண்ட விநாயகருக்குக் கோயில் அமைக்க முயற்சி செய்தபோது, பயன்படுத்தப்படாமல் இருந்த சர்ச் கட்டடத்தைக் கொடுத்து விட்டார்கள். இப்போது தினசரி ஆராதனை, அன்னதானம் என்று விநாயகர் ஜமாய்க்கிறார். இந்தத் தகவலை நமக்குச் சொன்னவர், சமீபத்தில் ஆஸ்திரேலியாவுக்குச் சென்று திரும்பிய விடுதலைச் சிறுத்தை தொல். திருமாவளவன்.

"மெல்போர்ன் ஈழத்தமிழர் சங்கத்தின் வெள்ளிவிழாவில் கலந்து கொள்ளச் சென்றிருந்தேன். அங்கே ஈழத் தமிழர்கள் நிறையப் பேர் வசிக்கிறார்கள். ஈழ முரசு, ஈழ நாதம், தமிழ் கார்டியன் என்று பத்திரிகைகள் நடத்துகிறார்கள். இன்பத் தமிழ் ஒலி, தமிழ் முழக்கம், ஆஸ்திரேலியா தமிழ் ஒலிபரப்பு கூட்டு ஸ்தாபனம் என்று வானொலி நிலையங்கள் ஒரு பக்கம் அசத்துகின்றன. சிட்னி நகரில் 'சிகரம்' என்ற தமிழ்த் தொலைக்காட்சியும் உண்டு. மொத்தத்தில் அங்கு தமிழ் மணக்கிறது;



மகிழ்விக்கிறது'' என்கிறார் திருமாவளவன்.

"'பொடா' பயம் இல்லாமல் ஈழத் தமிழர்கள் மத்தியில் பேச வாய்ப்புக் கிடைத்ததா?''

''அது இந்தியாவோ, வெளிநாடோ, எங்கிருந்தாலும் ஈழப் பிரச்னையில் என் பேச்சு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அந்தப் பேச்சின் அடிநாதம் ஈழத்தில் தமிழர்கள் சுயமரியாதையுடன் சுதந்திரமாக வாழ வேண்டுமென்பதுதான்'' என்கிறார் தொல். திருமாவளவன்.

- ப்ரியன்




பாண்டிச்சேரியில், அவன் **எனக்குள் ஒருவன்** என கண்டுகொண்டேன்.

பாண்டிச்சேரி, சுய-உணர்வு கதைகளுக்கு ஒரு புகலிடம். இன்று, உங்களுக்கும் ஒரு சிறந்த புகலிடத் தேர்வாக அது அமையக்கூடும். அளவிலா தியான மண்டபங்கள், தெய்வீக நினைவிடங்கள், யோகா மையங்கள், மணம் கமழும் எண்ணெய் வகைகள், நறுமணமிக்க மெழுகுவர்த்திகள், சுகமான ஊதுபத்திகள், எண்ணத்திற்கேற்ற அவென்யுக்கள், கண்டிமிழுக்கும் சர்ச்சுகள், அலைவீசும் கடற்கரை, அமைதியான நிகர்நிலை நதிகள் போன்றவை உங்களுக்கு உதவிடக் காத்திருக்கின்றன. வாருங்கள். ஏதேனுமொரு வார இறுதிக் காலத்தை இனிமையானதாக்கி நீங்கள் புதுப்பொலிவு பெற்றிடுங்கள்.

PEACEFUL

Pondicherry

*Give time a break.*

McCANN/PT/11-03

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்: பாண்டிச்சேரி சுற்றுலா: தொலைபேசி: 91-413-2334575/2333590/2330532.
ஃபேக்ஸ்: 91-413-2330532. இ-மெயில்: e_pttdc@sify.com இணைய தளம்: www.tourisminpondicherry.com

# வாசகன்

**அ.பாண்டியம்மாள்**

புத்தகக் கண்காட்சியில் ஓரளவுக்குக் கூட்டம் இருந்தது. நானும், சீதாராமனும் கடைக்குள் நுழையும்போது ஒருவர் இன்முகத்தோடு வரவேற்றார். அனேகமாக, அவர்தான் இந்தக் கண்காட்சியை ஏற்பாடு செய்திருக்க வேண்டுமென அனுமானித்தேன். ஒவ்வொருவரும் அவரவர் புத்தகங்களைத் தேடும் வேட்டையில் மும்முரமாயிருந்தனர்.

"ஏண்டா சீதா ராமா! இங்க வந்தா கண்டிப்பா புத்தகம் வாங்கணுமாடா?" ஒருவித பயத்தோடு கேட்டேன். ஏனென்றால், புத்தகம் வாசிப்பதில் எனக்கு அவ்வளவு ஆர்வம் கிடையாது. அதைவிட முக்கியக் காரணம், என் மனைவியிடம் அர்ச்சனை வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டும்.

"கட்டாயமில்லை. ஆனால் வாங்காமல் போனால் நல்லா இருக்காது" எனச் சொல்லிவிட்டு, புத்தகங்களை ஆராய ஆரம்பித்தான். நானும் அவனுடன் சேர்ந்து ஏதாவது புத்தகத்தை விரிப்பதும் மூடுவதுமாக இருந்தேன்.

எனக்கு எப்போதும் காலையில் எழுந்தவுடன் மனைவியுடன் சண்டை போடுவதற்கே சரியாயிருக்கும். இதிலெங்கே படிக்க? ஒரு சராசரி மனிதனின் இயந்திர வாழ்க்கையைத்தான் நானும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். ஆனால் சீதாராமனோ எனக்கு நேரெதிர். எல்லா எழுத்தாளர்களையும் தெளிவாகத் தெரிந்து வைத்திருப்பான். கதையை மேலோட்டமாகப் படித்தே, இது இன்னாருடைய எழுத்து என்று மிகச் சரியாகச் சொல்லிவிடுவான். அறிவுஜீவி!

எல்லோரும் பணம் சம்பாதித்து வங்கியில் போட்டு வைத்தால், அவன் புத்தகங்களாக வாங்கி அலமாரியில் அடுக்கி வைத்தான்.

நான்தான் அடிக்கடி சொல்லுவேன், "ஏண்டா சீதாராமா, பணமா சேர்த்து வைச்சாலாவது, பிற்காலத்திலே உபயோகப்படும். நீ இப்படி புத்தகமா சேர்த்து வைக்கிறே எல்லாம் வேஸ்ட்டுடா" என்பேன்.



"போடா போ! உனக்கென்னடா தெரியும் புத்தகங்களைப் பத்தி? அதுல எவ்வளவு விஷயங்கள் இருக்குன்னு, நீ படிச்சாத்தாண்டா புரியும். ஒவ்வொரு மனிதனுக்கும் சிறந்த வழிகாட்டியா, நல்ல தோழனா, பல சமயங்கள்ல புத்தகங்கள் உதவி செய்யும்"னு என்னென்னவோ சொன்னான்.

என்னைக்கூட லைப்ரரியில் சேர்த்துவிட்டது அவன்தான். அதுவும் ஒருவிதத்தில் எனக்கு நல்லதாகப் போய்விட்டது. என் மனைவியிடம் சண்டை போட நேரிடும்போதெல்லாம், நூலகத்தில் போய் அமர்ந்து விடுவேன். அந்த அமைதியான சூழ்நிலை மனசுக்கே கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்.

**எ**னக்கும் சீதாராமனுக்கும் இடையே உண்டான நட்புகூட புத்தகத்தின் மூலம்தான். பக்கத்துத் தெருவிலிருக்கும் கடையில் பொருள்கள் வாங்கிக்



கிளம்பும்போது, கடைக்காரர் கூப்பிட்டார்.

"இது சீதாராமன் சாரோட புக். மறந்து வைச்சிட்டுப் போயிட்டார். அவர் வீட்டைக் கடந்துதானே நீங்க போகணும்? ப்ளீஸ்.. கொஞ்சம் கொடுத்துடுங்க" அவர் நீட்டிய புத்தகத்தை வாங்கிக் கொண்டு, சீதாராமன் வீட்டுக்குச் சென்று விவரம் சொன்னேன். அவர் ஒரு அம்பது வயதுக்காரராக இருப்பார் என நினைத்துக் கொண்டே சென்ற எனக்கு, பெரிய ஏமாற்றம். என்னைவிட இளைஞன்!

"ரொம்ப நன்றிங்க! இவ்வளவு தூரம் மெனக் கெட்டு எனக்காக புத்தகத்தைக் கொண்டு வந்திருக்கிங்க. ஏதாவது சாப்பிட்டுட்டுப் போங்களேன்."

"பரவாயில்லை. இன்னொரு நாள் வர்றேன்." அதன் பிறகு "வாடா, போடா" என பேசு மளவுக்கு நெருங்கி விட்டோம்.

" 'கல்கி', 'சாண்டியல்யன்' இவங்களெல்லாம் பெரிய அர சியல் தலைவர்களா?" எனக் கேட்ட என்னை, ஜெயகாந்தன் முதல் ரமணி சந்திரன் வரை வாசிக்க வைத்தான். அவ்வளவு சீக்கிரத்தில் யாருடனும் நெருங்காத என்னை,

அவனுக்குப் பிடித்துப் போனதில் எனக்குத் தான் ஆச்சர்யம். அவனுடன் பழக்கம் ஏற்பட்டதிலிருந்து இன்று வரை, எங்கு புத்தகக் கண்காட்சி நடந்தாலும் என்னையும் கூடவே அழைத்து வந்துவிடுவான். இன்றும் அப்படித்தான் வந்தோம்.

"சீதாராமா! எனக்கொரு யோசனை"

"என்ன?"

"புத்தகம்னா உயிரையே விடற. வீட்ல மினி லைப்ரரியே வைச்சிருக்க. பேசாம இன்னும் கொஞ்சம் புத்தகம் வாங்கி, நீயே சொந்தமா ஒரு கடை வைச்சிடலாமே? தொழிலுக்குத் தொழிலும் ஆச்சு; எப்பவும் நீ படிச்சிட்டேயும் இருக்கலாம்."

"எனக்கும் ரொம்ப நாளா இதே யோசனைதான். அப்படித்தான் செய்யப் போறேன்."

அடுத்து வந்த சில நாட்களிலேயே நல்ல நாளாகப் பார்த்துப் புத்தகக் கடை திறந்தான். அதன் பின் ஓரிரு வாரங்கள் அவனைச் சந்திக்க முடியாமல் அலுவலகத்தில் ஒரே வேலை. இந்த ஞாயிற்றுக்கிழமை எப்படியும் அவனைச் சந்திக்க முடிவெடுத்தேன்.

நான் சென்றபோது வியாபாரம் ஜரூராய் நடந்து கொண்டிருந்தது. என்னைப் பார்த்தவுடன் அன்புடன் வரவேற்றான். ஆனால் பழைய சீதாராமனாக முகம் பிரகாசிக்கவில்லை. டென்ஷனாக இருந்தான். கூட்டம் கொஞ்சம் குறைந்ததும், நானாகப் பேச்சுக் கொடுத்தேன்.

"என்ன சீதாராமா! வியாபாரம் எப்படி நடக்குது?"

"ம்... நல்லாத்தான் போய்க்கிட்டு இருக்கு."

"இப்ப சமீபத்தில சுஜாதா எழுதிய புத்தகம் படிச்சியா?"

"அதைப் படிக்க எனக்கெங்க நேரமிருக்கு?"

"என்னடா இப்படிச் சொல்லிட்ட?"

"ஆமாம்பா! வாழ்க்கையில நாம எதையாவது தேடிக்கிட்டே இருக்கும்போது தான், வாழணும்னே ஆர்வம் வரும். தேடித் தேடி புத்தகங்களைப் படிச்சபோதெல்லாம் ஒருவித சந்தோஷமும் ஆர்வமும் இருந்தது. ஆனா, இப்போ எந்தப் புத்தகத்தை என்ன விலைக்கு விற்கலாங்கற வியாபாரக் கண்ணோட்டம்தான் வெளிப்படுது'' என்றான் கவலை தோய்ந்த குரலில்.

அதற்குள் ஒருவர் வந்து ஏதோ புத்தகம் கேட்க, ஸ்டூல் மீது ஏறி அதை உருவிக் கொண்டிருந்தான் சீதாராமன்! ஒரு ரசனை மிக்க வாசகன், வியாபாரி ஆகியிருக்க நான் மௌனமாக வெளியேறினேன்.

## குளிக்காத சாமியார்!



மதுரை ஆண்டிப்பட்டி அருகே உள்ள வாடசன்னாசி ஆசிரமத்தில் வசித்து வரும் அகஸ்தியர் சுவாமி, கொடிய நோய்களுக்கு மருந்து தந்து குணப்படுத்தி வருகிறார்.

இவர் இருபத்தைந்து வருடங்களாகக் குளிக்காமல் இருந்தாலும், புத்துணர்வோடு இருக்கிறார். அகஸ்தியர் சுவாமி தம்முடைய உடலில் நவபாஷாணம் பூசிக் கொண்டிருப்பதால், யாதொரு சரும நோயும் அண்டாமல் இருப்பதாக அந்த ஊர் மக்கள் சொல்கிறார்கள்.

படம், தகவல்: தேனிகற்பகம் ரவி ராஜாதாசன்
உதவி: தேனிமுருகேசன்

மதுரையின் முதல் பெருமை திருமலை நாயக்கர் மஹால். வயது சுமார் நானூறு. தற்போது இருக்கும் மஹால், ஓரிஜினலாக திருமலை நாயக்கர் கட்டியதில் நான்கில் ஒரு பங்கே. அதுவும் முக்கிய அரண்மனைப் பகுதி மட்டுமே. அரண்மனையைச் சுற்றி நீளமான மதில் சுவர் இருந்திருக்கிறது. அந்தப்புரம், விருந்தினர் தங்கும் மாளிகை, ஆயுதக்கிடங்கு, ரங்கவிலாசம் என்னும் தர்பார், அகழிகள் இருந்திருக்கின்றன. அரண்மனை வாயிலும் வட கிழக்

# பிரம்மாண்டத்தின்



* பத்துத் தூண் சந்து

கில் இருந்திருக்கிறது. இதற்கு அருகில் ஒரே வரிசையில் பத்துத் தூண்கள் இப்போதும் இருக்கின்றன. கிரானைட் கற்களால் ஆன தூண்கள், ஆதலால் யாராலும் ஒன்றும் செய்ய முடிய வில்லை. இல்லையென்றால் இவற்றை யும் இடித்துத் தள்ளி வீடோ, கடையோ கட்டியிருப்பார்கள்.

யானைகள் கட்டுவதற்கு இந்தத் தூண்கள் என்று சில செவிவழிச் செய்திகள் சொன்னாலும், "யானை கள் கட்ட ஐம்பது அடி உயரத் தூண்கள் தேவையில்லை. தமது அரண்மனை வாயிலுக்கு அழகூட்ட அமைத்திருக்கலாம்" என்கிறார்கள்.



மஹாலில் உள்ள தூண்களும் இதுபோலவே கட்டப்பட்டவை தான். ஆனால் கிரானைட் கற்களுக்கு வெளிப்புறம் கண் ணாம்பு, (காரை) பூச்சுடன், கருப்பட்டி, நெல்லிச்சாறு, கான்றிக்காய், சுண்ணாம்பு, உளுந்து மாவுப் பசை, முட்டை கொண்டு கலவை தயாரித்து தூண்களை மெருகேற்றி யிருக்கிறார்கள்.

பத்துத் தூண்கள் இருந்த இடம் இப்போது 'பத்துத் தூண் சந்து' ஆகிவிட்டது. அந்த சந்துக் குள் நுழைந்தால்தான் தூண்கள் இருப்பதே தெரியும். அந்த அளவுக்கு, துணிக் கடைகள், பேனர்கள், வீடுகள்...!



திருமலை நாயக்கரின் கடைசி வாரிசு மீனாட்சி என்பவர் 1732ல் வசித் திருக்கிறார். அவருக்குப் பின் இந்த

அரண்மனையில் மெல்ல ஆக்கிரமிப்புகள் தொடங்கிவிட்டன.

கிட்டத்தட்ட இருநூறு ஆண்டுகள் பிரிட்டிஷ்காரர்கள் இருந்த போது, காகித மற்றும் நெசவுத் தொழிலுக்கு இந்த இடத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். பள்ளிக்கூடம் இருந்திருக்கிறது. மாவட்ட முன்சிப் கோர்ட்டும் 1970 வரை மஹாலில் இருந்திருக்கிறது.

அரண்மனையின் பட்டு நெசவு வேலைகளுக்காக, பட்டு நூல் காரர்களை அரண்மனையின் வடக்குப் புறத்தில் குடியமர்த்தினாராம் நாயக்கர். தற்போது மஹாலைச் சுற்றியுள்ள இடங்களில் 'பட்டு நூல்காரர்கள்' என்னும் சௌராஷ்டிர மக்களே அதிகம் வசிக்கிறார்கள். 1970க்குப் பிறகே, மஹால் தமிழ்நாடு தொல்லியல் துறைக்குக் கீழ் வந்திருக்கிறது. இங்கு மொத்தம் இருநூற்றி நாற்பத்தியெட்டுத் தூண்களும், நூற்றி ஐம்பத்தியெட்டு அழகான வளைவுகளும் இருக்கின்றன. மஹாலின் உள்ளே இருக்கும் தூண்களில் ஆங்காங்கு காரை பெயர்ந்து உதிர ஆரம்பித்திருக்கிறது.

# பரிதாபம்!

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது செய்யப்பட்ட புனரமைப்புப் பணியை அடுத்து, தற்போது பராமரிப்புப் பணியை பொதுப்பணித்துறை மேற்கொள்ளவிருக்கிறது. "ஆங்கிலேயர் காலத்தில் கோர்ட் நடந்தபோது, மஹாலின் மேலே சேம்பர் அறை கட்டினார்கள். கட்டடத்தின் மேலே அதிக பளு ஏற்றியதால் பாரம் தாங்காமல் நிறைய விரிசல்கள் ஏற்பட்டுள்ளன. அந்த அறையை இடித்து விரிசல்களைச் சரி செய்ய உள்ளோம்." என்கிறார் மஹாலின் தொல்லியல் அலுவலர் மற்றும் உதவி இயக்குநர் (பொறுப்பு).



• கிரானைட் தூண்கள்



• நாயக்கர் அரண்மனை

பராமரிப்புப் பணிகள் ஒரு பக்கம் இருக்கட்டும். தூண்களில் நமது பெயரைக் கிறுக்காமல் இருந்தாலே தொன்மை காத்த புண்ணியம் கிடைக்கும்.

கட்டுரை, படங்கள் : **சுபா, மதுரை-18**

# மதுரை மறக்காத 'வெள்ளை' உள்ளம்!

ஆங்கிலேயர் ஆட்சி. மதுரையில் பணிபுரிய வந்தார் பென்னி குயிக் என்ற ஒரு வெள்ளைக்கார என்ஜினியர். மதுரை, இராமநாதபுரம், வத்தலக்குண்டு, உத்தமப் பாளையம் பகுதிகளில் குடிக்கக் கூட தண்ணீர் இல்லாமல் தவிக்கும் மக்களைப் பார்க்கிறார். மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி, வீணே ஓடி அரபிக்கடலில் கலக்கும் ஆறுகளைப் பற்றிக் கேள்விப்பட்டு, ஆய்வுக்குக் கிளம்புகிறார். முல்லை பெரியாறு கண்ணில் படுகிறது. மேற்கு நோக்கிப் பாயும் இந்த நதியை அணைகட்டித் தேக்கி கிழக்கு நோக்கித் திருப்பிவிட்டால்? ஆஹா! வறண்டு கிடக்கும் மதுரைக்கும், இராமநாத புரத்துக்கும் புத்துயிர் கிடைத்துவிடும்! ஆனால் அவரது எண்ணத்திற்கு மேற்குத் தொடர்ச்சிமலை பெரிய முட்டுக் கட்டையாய் நிற்கிறது. ஆனால் சிறிதும் தயங்கவில்லை பென்னி குயிக். மலையைக் குடைந்து நதியைத் திருப்பி விட்டால் பிரச்னை தீர்ந்தது. துள்ளிக் குதித்தவர், தனது திட்டத்தை ஆங்கிலேய அரசிடம் சமர்ப்பிக்கிறார். திட்டம் தெளிவாக இருப்பதைப் பார்த்த அரசு... அங்கீகரித்து அனுமதி தந்து, ஆரம்பிக்கப்பட்ட வேலைகளுக்கு நிதியும் தருகிறது. ஆனால் கட்டுமான வேலையில் ஈடுபட்ட மக்கள், பண்டிகைக் காலம், விலங்குகளின் தொல்லை என்றெல்லாம் காரணம் காட்டி, கூட்டம் கூட்டமாய் ஓடிவிட, பணிகள் பாதியில் நின்றன. இதைப் பார்த்த ஆங்கில அரசாங்கம் திட்டத்தை நிறுத்துவதாகவும், இனி நிதியுதவி கிடையாது என்றும் அறிவித்தது. துடித்துப் போனார் பென்னிகுயிக். உடனே லண்டன் சென்று, தமது கனவு சிதைவதைப் பற்றிக் கதறி அழுதபடியே மனைவியிடம் சொல்லியிருக்கிறார். கணவன் அழுவதை எந்தக் காதலி சகித்துக் கொள்வாள்? தனது நகைகள், சொத்துகள் எல்லாவற்றையும் விற்றுப் பணத்தைக் கொடுக்கிறார். உற்சாகத்தோடு தமிழகம் திரும்பிய பென்னி குயிக், விடாமல் முயன்று, மலையைக் குடைந்து, முல்லை பெரியாறு அணையைக் கட்டி முடிக்கிறார். இயற்கையின் திமிரை அடக்கி, மேற்கே ஓடிய நதியொன்றைக் கிழக்கே திருப்பிய வரலாற்று அற்புதம் நிகழ்ந்தேறுகிறது. பென்னிகுயிக் மறைந்து விட்டார். ஆனால் மதுரை, இராமநாதபுரத்தில் பெரும் பகுதி நிலப்பரப்பு இன்றும் வளமையாக இருக்கிறது. மெகா ஆச்சர்யம்! நன்றிக்குரிய இந்த வெள்ளைத் துரைமகனை மறந்து விடாமல், அவருக்குச் சிலை வைத்திருக்கிறார்கள். மதுரை தல்லாக்குளம் பொதுப் பணித்துறை அலுவலகத்தில் கம்பீரமான முழு உருவச் சிலை. கடந்த இரண்டாயிரமாவது ஆண்டில் திறந்து வைத்திருக்கிறார் அன்றைய முதல்வர் கலைஞர். ஆனால் அதற்கும் முன்பாகவே, உத்தம பாளையத்தில் அவருக்கொரு சிலையை நிறுவியிருக்கிறார்கள்.

-ஜெ





• தல்லாக்குளத்தில் பென்னிகுயிக் சிலை



# வாசகர் குமுறல்



## மதுரை மாநகரம் என்ன செய்தது?

மாலை ஆறு மணி இருக்கும், என் மாமாவும் நானும் மதுரை ரயில்வே ஸ்டேஷனில் நுழைந்தபோது. சென்னைக்குப் போக ரிசர்வ் செய்துவிட்டு வெளியே வரும் நேரம், கண்மண் தெரியாத மழை! வெளியே நிறுத்தி வைத்த காரின் அருகே செல்ல இயலவில்லை. சாலையில் இடுப்பளவு தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. சைக்கிள் ரிக்ஷா ஒன்றில் வீடு வந்து சேர்ந்தோம்.

இது நடந்தது 1982ம் வருடம். மழை நீர் வடிகால்கள் மதுரையில் சரிவர அமைக்கப்படாத காலம்.

சமீபத்தில் மதுரையில் பலத்த மழை. ரயில்வே ஸ்டேஷன் அருகே வெள்ளத்தில் மூழ்கிய கார் ஒன்றிலிருந்து பயணிகளை மீட்க, போலீசும் தீயணைப்புப் படையினரும் போராடினார்கள் என்று செய்தி.

இருபது வருடங்களாக மதுரை மாநகராட்சி என்ன செய்தது?

கோடையில் தண்ணீர்ப் பஞ்சம். மாரியில் ஆளை முழ்கடிக்கும் வெள்ளம். இதுவே மதுரையின் கண்ணீர்க் கதை.

சொக்கிக்குளம், தல்லாகுளம், கிருஷ்ணராயர் தெப்பக்குளம், வண்டியூர் தெப்பக்குளம், மாடக்குளம் கண்மாய், என்று நிறைய குளங்கள் அலையடித்து ததும்பி நின்றதை, ரசித்திருக்கிறேன்.

இன்று? தெப்பக் குளத்தைச் சுற்றிக் கடைகள். குளம் குப்பையால் தூர்ந்து கிடக்கிறதாம். தண்ணீருடன் ஜிலுஜிலுத்த சொக்கிக்குளம் கண்மாயில், இன்று மதுரை வானொலி நிலையம் இயங்குகிறது.

மதுரை மாநகராட்சி என்ன செய்தது என்று கேட்டேனே.

பரந்து விரிந்த தல்லாகுளம் கண்மாயைத் தூர்த்து, அதில் கம்பீரமாகக் குடியேறியிருக்கிறது.

**- ஸூஜாதா விஜயராகவன்**



## விமோசனம் பிறக்குமா?

தீபாவளி சிறப்பு நிகழ்ச்சிகள் என்ற பெயரில் 24.10.2003 அன்று அனைத்து சேனல்களும் தீபாவளி சிறப்புத் திரைப் படம், கண்ணோட்டம், புதுப்பாடல், நட்சத்திரப் பேட்டி, விமர்சனம் என தங்களது கதவுகளை சினிமாவுக்கே திறந்து விட்டிருந்தன. நாட்டில் மற்ற துறைகள் இவர்கள் கண்களுக்கு ஏன் தெரிவதில்லை? பல துறைகளில் பெருமுயற்சி கொண்டு முன்னேறும் இளைய தலைமுறையினர் எத்தனையோ பேர் இருக்க, கனவுத் தொழிற்சாலையின் முன் மிகுந்த பாதையில், மயக்கத்தோடு திரியும் சந்ததிக்கு அட்சதை போடுகின்றனர் நமது சேனல் ஜாம்பவான்கள். விசேஷ நாட்களிலாவது வித்தியாசமாய்ச் சிந்தித்து விமோசனம் பிறக்கச் செய்வார்களா?

**- ப.கா.மணிமொழியன், நாகமலை**

## சேவல் செய்த பாவம் என்ன?

கடந்த 30.10.2003 அன்று திருச்செந்தூரில் ஸ்ரீகந்தஷஷ்டி உத்ஸவம் கோலாகலமாக நடந்தது. ஆனால் ஒரு நெருடல். கந்தக் கடவுள் - சூரபத்மன் பாவனை யுத்தத்தில், உயிருடன் ஒரு சேவல் வேலால் கதறக் கதறக் கொல்லப்பட்டது. லட்சக்கணக்கான அருளாளர்கள் முன்னிலையில் ஓர் உயிர்ப் பலி கொடுக்கப்பட்டது மனத்தைப் பிசைந்தது. பிராணி வதை தடைச் சட்டம் போட்டால் என்ன?

**-பி.எஸ். ஈஸ்வரன், திருநெல்வேலி.**



# நான் வேண்டுமோ?

## 5

ராஜ்குமாரின் வீட்டுக்குள் நுழைந்ததும் நிவேதனா நின்று விட்டாள்.

"ஏய், என்ன இது?"

"உன் போட்டோ" என்றான், ராஜ்குமார் புன்னகை செய்து. "கொஞ்சம் அவுட் ஆஃப் ஃபோகஸாயிருச்சு..."

நிவேதனா தெருவைக் கடந்து கொண்டிருக்கும் பரபரப்பு புகைப்படத்தில் சிறைப்பட்டிருந்தது.

"பொம்பிளைங்களை ரகசியமா போட்டோ பிடிக்கறதுதான் உன் தொழிலா?"

"ஒரே ஒரு பொண்ணைத்தான் விதம் விதமாகப் படம் பிடிச்சிருக்கேன்" என்று அவளை விரலால் காட்டினான்.

அந்த வீடு பொதுவாகக் குறைந்த வெளிச்சமும், சிக்கனமான காற்றோட்டமுமாக அமைந்திருந்தது. வண்ணங்களைத் தேர்ந்தெடுத்தவருக்கு ரசனைப் பற்றாக்குறை. மிட்டாய் நிறச் சுவரில் பல இடங்களில் உள்வெள்ளை புலப்பட்டது. முறையில்லாமல் வெவ்வேறு புள்ளிகளில் ஆணிகள். அவற்றில் தொங்கும் சட்டமிட்ட தெய்வங்கள்.

சுவரோரமாக, பயன்படுத்தித் தேய்த்த இடங்களில் பளபளப்புடன் நீளமான மர பெஞ்ச். ஜாடிகளில் பருப்பு, உப்பு, சர்க்கரை, காபித்தூள்... கடப்பா கல் சமையல் மேடை மெருகெல்லாம் இழந்து நோய்வாய்ப்பட்டிருந்தது.

"அதனாலத்தான் நானே வரேன்னு சொன்னேன்" என்றான், உள்ளே உள்ளே திரும்பிப் பார்த்துக் கொண்டு.

"எதனால?"

"இந்த வீட்டுல நீ உக்காரக் கூட சரியான சேர் இல்ல.."

"புல்ஷிட்"

"ம்?"

"நான் சேரைப் பார்க்க வரல்ல. உன்னைப் பார்க்க வந்தேன். திடீர்னு என்னாச்சு உனக்கு? தஞ்சாவூருக்கு ஏன் போனே?"

"என் தம்பிக்கு.." என்று அவன் பதிலை முடிப்பதற்குள், உள்ளறைக் கதவு ஓங்கி ஓங்கி இடிபட்டது.

அவள் பதறி எழுந்தாள்.

அவன் பரபரவென்று ஓடி அங்கிருந்து ஜன்னலைத் திறந்து.



"அவனை வெளியே விடும்மா" என்றான்.

கதவு திறந்த வேகத்தில் உள்ளேயிருந்து வெளியே பாய்ந்தவன் நான்கடிக்கும் குறைவான உயரமிருந்தான். அணிவித்திருந்த டிராயர் முழங்காலைத் தாண்டியிருந்தது. ஒரு காலுக்கும் இன்னொரு காலுக்கும் மனஸ்தாபமாகி ஓட்ட நடையில் கோணல். உதடுகளை மீறி பளிங்குச் சில்லுகளாகப் பற்கள். முகத்தில் சீரற்ற தாடி, மீசை. குழிவுகளுக்குள் அடங்காது துருத்தியிருந்த கண்கள்.

"என் தம்பி" என்று ராஜ்குமார் அறிமுகம் முடிப்பதற்குள், அவன் பாய்ந்து அவளுடைய செருப்புகளை அள்ளி ஜன்னலுக்கு வெளியே வீசினான். நிவேதனாவைப் பார்த்து ஆர்வமானான். பற்களாகச் சிரித்து கிட்டே வந்தான். அவள் பின்னேறப் பின்னேற, சட்டென்று காது வளையத்தைச் சுண்டினான்.

நிவேதனா கலவரமானதில் ரவிக்கையெல்லாம் வியர்த்து ஈரமானது.

"தினா" என்று ராஜ்குமார் சற்றே மிரட்ட, தன் அறைக்குள் ஓடினான். பாதி சார்த்திய கதவுக்கு அந்தண்டையிலிருந்து நிவேதனாவை இமை கொட்டாமல் பார்த்தான்.

ராஜ்குமார் கிட்டே போய் அவன் கன்னத்தில் முத்தமிட்டு, "கொஞ்ச நேரம் இதே ரூமுல இருக்கணும். ம்?" என்றான்.



அவன் சம்மதித்து கதவைச் சார்த்திக் கொள்ள, ராஜ்குமார் அவளிடம் திரும்பினான்.

"பதினெட்டு வயசு" என்றான். "தினாவை எந்த ஹோம்லயும் விடறதுக்கு அம்மாவுக்கு மனசில்ல. அதிகபட்சம் பதினைஞ்சு வருஷம் தான் ஆயுள்னு டாக்டருங்க சொல்லியிருந்தாங்க. அம்மாவைத் தாண்டி கடவுளாலயே தினாகிட்ட வர முடியல."

"இருபது வருஷத்துக்கு முன்னால எங்கக் குடும்பம் ஊட்டில இருந்தது. சேரிங் கிராஸ்ல அப்பா பேக்கரி வைச்சிருந்தாரு. விதம் விதமா சாக்லேட் பண்ண அம்மாவுக்குத் தெரியும். கிலோக் கணக்குல பொட்டலம் கட்டிட்டேயிருப்போம். அப்பா உக்கார நேரமில்லாம காசை வாங்கி கல்லாவுல போட்டிட்டிருப்பாரு. பிரிட்டிஷ்காரங்க கட்டி விட்ட வீடு. மரமும் கண்ணாடியுமா, கல்யாண மண்டபம் மாதிரி பெரிசு. ஒவ்வொரு சம்மருக்கும் உறவுக்காரங்கல்லாம் வீடு பூரா நெறைஞ்சிடுவாங்க."

நினைவுகளைப் புரட்டுவதிலேயே ஊட்டிக் குளிரை அனுபவிப்பவன் போல, கைகளைக் குறுக்கில் கட்டிக் கொண்டான்.

"அப்பாவுக்கு நான் ரொம்பச் செல்லம். பேட்டரி ரயில், சின்னக் கேமிரா, ரேடியோ எது கேட்டாலும் அடுத்த நிமிஷம் வந்துரும். கோயமுத்தூருக்குப் போய் கிரிக்கெட் பேட்

வாங்கித் தந்தாரு. பீச்சைப் பாக்கணும்னு கேட்டதுக்காக கடையை இரண்டு நாள் மூடிட்டு, மெட்ராஸுக்கு அழைச்சிட்டுப் போனாரு. எல்லாம் தினா பொறந்ததும் சட்டுனு முடிவுக்கு வந்துருச்சு. மெட்ராஸ், பாம்பேனு எத்தனை டாக்டர் வீட்டுக்குப் படையெடுத்திருப்பாங்க? எந்த மருந்தாலும் தினாவைச் சரிப்படுத்த முடியாதுன்னு டாக்டருங்க கை விரிச்சிட்டாங்க. டாக்டர் வீட்டுலயே அம்மா பழி கெடந்ததுல, சாக்லேட் பாட்டிலெல்லாம் காலியாவே இருந்தது. எண்பது கிலோ இருந்த அப்பா அம்பது கிலோவானாரு..."

மேஜை மீது பிரேமில் சிறைப்பட்ட அப்பாவின் புகைப்படத்தைக் கொஞ்ச நேரம் கையில் வைத்துக் கொண்டிருந்தான்.

"ஒரு வெள்ளிக்கிழமை. கடையில நான் கீழே உக்காந்து பிஸ்கெட் அடுக்கிட்டிருந்தேன். திடீர்னு நெஞ்சைப் பிடிச்சிக்கிட்டு அப்பா எம் மேல விழுந்தாரு. எழுந்திருக்கவேயில்ல... தாத்தா வந்து தஞ்சாவூருக்கு எங்களையெல்லாம் அழைச்சிட்டுப் போயிட்டாரு..."

'உன் கதை எனக்கெதற்கு?' நிவேதனா பொறுமையில்லாமல் கால்களை நகர்த்தினாள்.

"ஊட்டியை விட்டு வராம இருந்திருந்தா, உன்னை இன்னும் சீக்கிரமே கண்டு பிடிச்சிருப்பேன்..."

அவளுக்கான புள்ளியைத் தொட்டு விட்டான்.

"என்னை எதுக்கு நீ கண்டுபிடிக்கணும்?"

நிமிர்ந்தான். இதோ முடிச்சு அவிழப் போகிறது.

"எப்படிம்மா இருக்கே, நிவேதனா?" என்று காப்பி டம்ளரைக் கொண்டு வந்து பெஞ்சில் வைத்தவள் முகத்தில் ராஜ்குமாரின் மூக்கும் கண்களும் இருந்தன. கூந்தலில் இருந்த நரை குரலில் இல்லை. பருத்திப் புடைவையானாலும் கட்டியிருந்த விதத்தில் திருத்தமிருந்தது. வடிவான புருவங்கள், வரிசைத் தப்பாத பற்கள், பட்டுப் புடைவை கட்டி காரில் கொண்டு இறக்கினால், காஸ்மோபாலிடன் கிளப்பில் கேள்வி கேட்காமல் கேட்கள் திறக்கும்.

"அம்மா?" என்றாள், நிவேதனா.

"ஆமாம்."

"என் பேரு எப்படித் தெரியும்? ராஜ்குமார் சொன்னாரா?"

"உள்ளே அழைச்சிட்டுப் போயிடேன், ராஜ்"

"வா" காப்பிக் கோப்பையை எடுத்துக் கொண்டு அவன் வேறு கதவைத் திறந்து நுழைந்தான்.

'ஏய், நிவேத், நீ எங்கே வந்திருக்கிறாய்? யார் இவர்கள்? இந்த வீட்டில் உனக்கு என்ன வேலை? அவன் கூப்பிட்டால், பின்னாலேயே நாய்க்குட்டி மாதிரி போக வேண்டுமா?'

நிவேதனா பின்னாலேயே போனாள்.

வெளி அறையை விட உள்ளறை சுத்தமாயிருந்தது. ஜன்னலோரமாக பெரிய மேஜை. கம்ப்யூட்டர், உயரமான கறுப்பு ஸ்பீக்கர்கள், தேன் நிற மர அலமாரியில் நெருக்கி நிற்கும் புத்தக முதுகுகள். ஓரமாக ஒற்றைப் படுக்கை. முனையோடு முனை மடித்த போர்வை. கசங்கலில்லாத தலையணை.

கதவு தானாக மூடிக் கொண்ட 'க்ளிக்' கேட்டுகூட அவளுக்கு அச்சம் வரவில்லை. நாற்காலியில் அமர்ந்தாள். காப்பியை உறிஞ்சினாள்.

புத்தகங்களுக்கிடையிலிருந்து ஓர் ஆல்பத்தை எடுத்தான். கவனமாகக் கையாளச் சொன்னான்.

அட்டையைப் புரட்டியதும் அதிர்ந்து நிமிர்ந்து பார்த்தாள்.

புன்னகையுடன் 'ஆம்' என்று தலை அசைத்தான்.

பழுப்பேறிய புகைப்படங்களில் அவள் இருந்தாள். முழங்கால் வரை ஏறிய கவுனுடன், ஐந்து வயதுச் சிறுமியாக ஊட்டியின் மேகப் பின்னணியில், அமெச்சூர் கேமிராவால் பதிவு செய்யப்பட்ட படங்கள். சிலவற்றில் அவளை மடியில் ஏந்தி, ஊஞ்சலில் உயர்த்திப் பிடித்து, கன்னத்தோடு கன்னம் இழைத்து - அவள் அம்மா. சிலவற்றில் அவளைத் தோளில் உட்கார்த்தி, சுற்றி அணைத்து காரின் மீது அமர்த்தி - அவன் அப்பா.

நிவேதனாவின் கண்களில் வியப்பும்,




- தனலட்சுமி




- எஸ். மோகன்

பிரம்பும் மின்னலடித்தன.

"இது-இது?"

"டென்ஷன் ஆகாம ஒவ்வொண்ணாப் பாரு."

அவள் இதுவரை பார்க்கக் கிடைக்காத புகைப்படங்கள். பசித்தவன் கவளங்களை அடைத்துக் கொள்வது போல், ஒவ்வொன்றையும் கண்களால் விழுங்கினாள்.

கடைசிப் படத்தில் மட்டக் குதிரையின் மீது பயம் விலகாது உட்கார்ந்து கேமிராவிற்காகப் புன்னகை செய்தாள்.

"இதையும் பார்த்திரு."

மேஜை இழுப்பறையைத் திறந்தான். பாலிதீன் உறை போட்ட பழைய தினசரி. பதினேழு வருடத்திற்கு முந்தைய தேதி. நைந்து போயிருந்தது.

*ஊட்டி மலைச் சரிவிலிருந்து உருண்டு கார் விபத்து!*

*அதிசயமாகத் தப்பித்த சிறுமி!*

அவளை அறியாமல் வாய் விட்டு உரக்கப் படித்தாள்.

"ஊட்டியின் அபாயகரமான வளைவுப் பாதையிலிருந்து ஒரு கார் கட்டுப்பாடு இழந்து, நேற்று மாலை கிடுகிடு பள்ளத்தில் விழுந்து நொறுங்கியது. அதில் பயணம் செய்த இளம் தம்பதி காருக்குள் நசுங்கி உயிரிழந்தார்கள். ஆனால் அவர்களது ஐந்து வயது மகள், சிறு காயங்களுடன் ஆச்சரியமாக உயிர் பிழைத்தாள்."

"நீதான்" என்றான்.

"இதெல்லாம் உன்கிட்ட எப்படி வந்தது?"

"பேப்பர்ல அடுத்த பாராவுல போட்டிருப்பாங்களே."

மசமசத்த வரிகளைப் படித்தாள்: "அந்தப் பகுதியில் விளையாடிக் கொண்டிருந்த எட்டு வயதுச் சிறுவன் ஒருவன், உயரத்திலிருந்து கார் விழுவதைக் கவனித்து, பொறுப்புடன் பெரியவர்களை அழைத்து வந்தான். அவன் மட்டும் கவனிக்காது விட்டிருந்தால், அந்தக் கார் பல தினங்களுக்குக் கண்டு பிடிக்கப்படாமலேயே இருந்திருக்கும். அந்தச் சிறுமியும் காருக்குள்ளிருந்து வெளி வர முடியாமல் உள்ளேயே உயிரிழந்திருப்பாள். காவல் துறையினர் சிறுவனை வெகுவாகப் பாராட்டினர்..."

நிமிர்ந்தாள். "நீயா?"

தலையசைத்து ஆமோதித்தான்.

கதவு திறந்து காபி டம்ளரை எடுத்துப் போக வந்தாள் அவன் அம்மா.

"அந்த விபத்துக்குப்புறம் இவன் சரியா சாப்பிட்டதில்ல. எப்பவுமே கார் விழுந்த பள்ளத்துல போய் எதையோ தேடிட்டேயிருப்பான்.." என்று வெளியேறும் முன் அவன் தலையைக் கலைத்தாள்.

"மூணு நாள் மயக்கத்துலயே இருந்தே. ஆஸ்பத்திரிக்கு ஓடி ஓடி வந்துருவேன்... அப்ப உனக்குப் போட்டதுதான் உச்சந் தலையில அந்தத் தையல்."

"இத்தனை நாள் எங்கேடா போயிருந்தே?" குரல் பதுங்கி வந்தது.

"அப்புறம் ரொம்ப நாளைக்கு ஊட்டில தான் நாங்க இருந்தோம். உன்னைத்தான் உங்க சித்தப்பா எங்கேயோ கண்காணாத இடத்துக்கு அழைச்சிட்டுப் போயிட்டாரு."

அவளிடமிருந்து அந்த செய்தித் தாளை வாங்கி மேஜையில் பத்திரப்படுத்தினான்.

"பத்துப் பதினைஞ்சு நாள் கழிச்சு அதே இடத்துல விளையாடப் போனபோது, புதருக்குள்ள கேமிரா கிடைச்சது. பார்க்கறியா?"

மேஜையின் இன்னொரு இழுப்பறையிலிருந்து எளிமையான புகைப்படக் கருவியை எடுத்தான். வெள்ளை பூத்திருந்தது. லென்ஸ் பகுதி விரிசல் விட்டிருந்தது.

"கேமிராவுக்குள்ள இருந்த ரோலை எங்கப்பாதான் ப்ரிண்ட் போட்டுக் கொடுத்தாரு."

தன் அப்பாவையே வாங்கிக் கொள்வது போல் வாங்கினாள்.

"நீ ஊட்டில வாழ்ந்த வீட்டைப் பார்க்கணும்போல இருக்கா?"

தாகத்துடன் நிமிர்ந்தாள். "அதுக்கும் போட்டோ இருக்கா?"

"இல்ல. ஆனா அந்த வீடு எங்கே இருக்குன்னு எனக்குத் தெரியும்.."

"அழைச்சுட்டுப் போறியா, ராஜ்குமார்?" என்றாள், குரலெங்கும் ஏக்கம் ததும்ப.

(தொடரும்)



# பண்டிகைக்குப் போனவன்

கடைசியில் மனசு மாறி
மொதலாளி லீவு தர
ரயிலேறி அண்டியாச்சு
பாத்ரூம்கிட்ட பதுங்கியாச்சு

ஊருக்குப் போறோன்றதை
நம்பவே நேரமாச்சு
ஆத்தாவப் பார்ப்போன்றதை
நினைக்கவே குஷியாச்சு

பொல பொலனு விடிஞ்ச பொறவு
வண்டி ஊருக்குப் போய்ச் சேரும்
வெடிச் சத்தம் பெரிசா கேட்கும்
மேள தாளத்தோட வரவேற்கும்

வீட்டுக்குள்ள நொழஞ்சாலே
ஆத்தா மொகம் பூத்துப் போகும்
மத்தாப்புத் தராத வெளிச்சத்தை
அவ மொகமும் பிரதிபலிக்கும்

காய்ச்சின எண்ணெயினு
உச்சியில வெச்சு அரைக்கையிலே
அவ உள்ளங்கை அழுத்தம் தெரியும்.
அது ஓடா தேஞ்சுப் போன
கதை புரியும்.

சுடு தண்ணி மேல பட
கதகதப்பு கிறங்க வைக்கும்
அரப்பு மணம் மூக்கில் ஏற
அந்தக்கணம் மயங்க வைக்கும்

புதுசு போட்டு பட்டாசு சுட்டா
வந்த வேலை நிறைஞ்சுப் போகும்
பட்டிமன்றம் சின்னத்திரைல
முடியுமுன்னே
பாதிப் பண்டிகை முடிஞ்சுப் போகும்.

சுடும்போது பட்டுச்சுன்னு
கொப்பளிச்ச இடம் காட்டையிலே
ஆத்தாவிடம் பொங்குகிற பரிவு
அங்கமெல்லாம் இனிச்சிருக்கும்
'அடுத்தாப்பிலயாச்சும்
இருக்கிறாப்பில வா'ங்கையிலே
'சரி'னு உதடு சொல்லும்
'முடியாதேனு' மனசு கெஞ்சும்



ஊருக்குத் திரும்பி வந்து
பலகாரத்தைப் பிரிக்கையிலே
காரணம் புரியாம அழுகை வரும்
என்மேலேயே கோபம் வரும்.

ஏலை உருண்டையை எடுத்து
அதில பதிஞ்ச ரேகையைப்
பார்க்கையில
ஆத்தாளே பக்கத்தில்
இருப்பது போலிருக்கும்
அந்நேரம் நிச்சயமா
அவளுக்கும் பொரையேறும்!

ஸ்ரீநிவாஸ் பிரபு



# "தமிழ்க் கொலை பண்ணமாட்டேன்"

## -பரத்வாஜ்

இசையமைப்பாளர் பரத்வாஜுக்கு 'ஜே. ஜே.' இருபத்தைந்தாவது படம். இதை முடித்துவிட்டு இந்திப் படத்துக்கு இசையமைக்கப் போகிறார். ஏவி.எம்.மில் உள்ள அவரது ரிக்கார்டிங் தியேட்டரில், இதயம் வருடும் மெல்லிய இசை உயிரை நனைக்கிறது. லேப் டாப்பில் இசை குறித்த செய்திகளை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தவரிடம் பேசினோம்.

**இந்த இருபத்தைந்து படங்கள்ல நீங்க என்ன சாதிச்சதா நினைக்கிறீங்க?**

நான் சினிமாவுக்கு வந்து ஆறு வருஷமாச்சு. நான் இசையமைச்சப் படங்கள் வருஷத்துக்கு ஒன்றோ இரண்டோ வருது. அந்தந்த வருஷத்துல ஹிட்டான பாடல்கள்னு பாத்தா, முதல் பத்து இடத்துல என்னோட பாடலும் இருக்கும். இது ரசிகர்கள் எனக்குக் கொடுத்த அங்கீகாரமா கருதறேன். ஓர் இசையமைப்பாளரா மக்கள் என்னை அங்கீகரித்தது சாதனை தானே? இந்த வெற்றிகளுக்குப் பின்னால நான் இழந்தது நிறைய. என்னோட முழு நேரமும் மியூசிக் மியூசிக்னே ஆகிப்போச்சு. இன்னைக்கு நான் ஒரு பாடல் கம்போஸ் பண்ணி ரிக்கார்ட் பண்ண, நூறிலிருந்து நூற்றைம்பது மணி நேரம் செலவாகுது. இவ்வளவு நேரம் வேலை பார்த்து ஒரு பாடல் ஹிட்டானாக் கூட, முழுப் பாராட்டும் இசையமைப்பாளருக்குக் கிடைக்கறதில்லை. இதை இழப்பாகத்தான் பார்க்கிறேன்.

**இயக்குனர் சரண்கூட மட்டும் அதிக படங்கள் பண்ணியிருக்கீங்க. அவருக்கும் உங்களுக்கும் அப்படியென்ன பந்தம்?**

சரணோட முதல் படம் 'காதல் மன்னன்'தான் தமிழ்ல எனக்கும் முதல் படம். முதல் படத்திலேயே சேர்ந்து பண்ணியதால் ஒரு நட்பு. எனக்கு நிறைய சுதந்திரம் தருவார். அவருக்கு எது தேவைங்கறது எனக்குத் தெரியும். அதை நான் கொடுக்கறேன். அவ்வளவுதான்.

இசைக்கான அடிப்படை கர்நாடக சங்கீதம்தான். ஆனால் கர்நாடக சங்கீதத்திலான திரைப்பாடல்கள் இன்றைக்கு ரொம்பக்



• 'ஜே.ஜே.' படத்தில்...







**குறைவா இருக்கு. இப்பவும் 'சங்கராபரணத்தைத்தான் சொல்ல வேண்டியிருக்கு. ஜீன்ஸ்'ல ரஹ்மான் கண்ணோடு காண்பதெல்லாம் பண்ணினார். பிறகு...**

ஒரு விஷயம்... நான் திரைப்பட இசையமைப்பாளன்தான். இங்க என்னோட மேதாவித் தனத்தைக் காட்ட இடமில்லை. ஒரு படத்தோட இயக்குனர் என்ன எதிர்பார்க்கிறாரோ, அதைத்தான் நான் கொடுக்க முடியும். 'பூவேலி' படத்துல 'ஒரு பூ எழுதும் கவிதை'னு ஒரு பாடல் பண்ணியிருப்பேன். அது ஹம்சநாதம் ராகம். எனக்குப் பிடிச்ச ராகம். கர்நாடக சங்கீதம் எனக்குப் பிடிக்குங்கறதுக்காக அதுல ட்யூன் பண்ண முடியாது. இயக்குனர்தான் இங்க தீர்மானிக்கறவரா இருக்கார். யாரும் வந்து, 'படத்துல ஆறு பாட்டு சார். நீங்களே நல்ல ட்யூனா போட்டுக்குங்க''ன்னு சொல்றதில்லை. நிறைய ட்யூன்களை உருவாக்கிக் கொடுக்கிறோம். அதுல அவங்களுக்குப் பிடிச்சதை செலக்ட் பண்றாங்க. இதே போலத்தான் கர்நாடக இசைக் கச்சேரி பண்றவங்களை ஏன் பாட வைக்கறதில்லைன்னு கேட்கறாங்க. உண்ணி கிருஷ்ணன், பாம்பே ஜெய்ஸ்ரீ, நித்யஸ்ரீன்னு வந்திருக்காங்க. ஆனா எல்லா கர்நாடக இசைப் பாடகர்களும் திரைப்பாடல்களுக்குப் பொருந்தமாட்டாங்க.

**இன்னைக்கும் நல்ல மெலடின்னால் பழைய பாடல்களைத் தானே சொல்ல வேண்டியிருக்கு?**

அந்தக்கால பாடல்கள்ல கதைகள் இருக்கும். இப்ப வர்ற பாடல்களுக்கு டான்ஸ் மூவ்மெண்ட்ஸ்தான் அதிகம் வேணும்னு கேட்கறாங்க. ஒரு படத்துல ஆறு பாட்டு இருந்தால், எல்லாத்துக்கும் டான்ஸ் ஏன்னு யாரும் கேட்கறதில்லை. இது இசையமைப்பாளரோட குற்றமில்லை. பாடலுக்கு வார்த்தைகள் மிக முக்கியம். எண்பதுகள் வரை அந்த முக்கியத்துவம் இருந்தது. பிறகு ஆர்கெஸ்ட்ராவுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. தொண்ணூறுகளுக்குப் பிறகு, எலக்ட்ரானிக் இன்ஸ்ட்ருமென்ட்ஸ் வந்தது. ஏ.ஆர்.ரஹ்மான் இதைப் பயன்படுத்தினார். இதை ஒரு வகையில வளர்ச்சின்னும் சொல்லலாம். இப்பவும் நல்ல மெலடிகள் வந்துகிட்டுதான் இருக்கு. என்னோட பாடல்கள்ல வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கறேன். ஏன்னா, எனக்கு என் தாய்மொழி மேல மிகப் பெரிய பற்று இருக்கு. தேவையில்லாம, தமிழ் தெரியாத, வட இந்தியப் பாடகர்களை அழைச்சுட்டு வந்து தமிழ்க் கொலை பண்ணமாட்டேன்.

'ஜே.ஜே.' படத்துல ஒரு பிரெஞ்ச் பாடகியைப் பாட வச்சிருக்கீங்களே...

ஆமா. 'கேமிங்'கற அந்தப் பாடகிக்கு முறையா தமிழ் சொல்லிக் கொடுத்து பாட வச்சிருக்கோம். அதுல நிச்சயம் தமிழ்க் கொலை இருக்காது.

- ஏக்ஜி

# மயிலாக வந்து ஆடிய மயூரநாதர்

"ஆயிரமானாலும் மாயவரம் ஆகாது" என்றுதான் தொடங்க வேண்டியிருக்கிறது. மயிலாடுதுறைக்காரர்களுக்கு, இந்தப் பெருமிதம் நியாயந்தான்.

கங்கை, யமுனை, ஸரஸ்வதி போன்ற தெய்வநதிகள்கூட, தங்களுடைய பாவங்களைக் கழுவிக் கொள்ள மயிலாடுதுறையில் துலாஸ்நானம் செய்கிறார்கள் என்றால், பெருமைக்குரிய விஷயம்தானே!

தேவி பார்வதி, ஈசனை அடைய மயிலுருவில் வந்து காவிரிக்கரையில் தவம் செய்கிறாள். பயந்து ஓடி வந்த மயிலுக்குக் கருணையுடன் அடைக்கலம் கொடுத்தபடியால், அஞ்சல் நாயகி என்றும், மயிலம்மை என்றும் பெயர் பெற்றாள். வடமொழியில் அபயப்பிரதாம்பிகை. அழகிய தமிழில் அம்-சொல்-நாயகி என்று பிரித்தால், 'அழகிய சொற்களையே வழங்குபவள்' என்று பொருள் கொள்ளலாம். நமக்குத் தரும் வரங்கள் அழகிய சொற்களாகத்தானே இருக்கும்?

அஞ்சல் நாயகி அன்புடன் சிவபெருமானைப் பூஜித்து வந்தபோது, தினமும் ஒரு மயில் வந்து பூஜை வேளையில் தோகையை விரித்து நடனம் ஆடிவந்தது. துணையாக இருந்து மயிலம்மையை மகிழ்வித்து வந்தது.

இந்த அழகிய காட்சியை திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை தலபுராணத்தில் பாடியிருக்கிறார்.

*இறைவியென்னுல கேத்திடும்*
*திரு மயில் காண*
*மறையின் அந்தமும் வான் தவ*
*யோகியர் உள்ளமும்*
*குறையறும் பெருந்தானமாக்*
*கொண்டு கூத்தாடும்*
*பிறையிருஞ் சடைப் பெருமயில்*
*தங்கி நின்றாடும்*

மயிலுருவம் தாங்கிய பிராட்டியை ஈசனால் பிரிந்திருக்க முடியவில்லை. தேவியுடன் கூடவே தாமும் தோகை மயிலாக வந்திருந்து நடனமாடியதால் அதற்குக் கௌரீதாண்டவம் என்று பெயர். யோகியர் உள்ளங்களில் கூத்தாடும் பெருமான், பிறை சூடிய சடையன், இறைவியாகிய மயில் கண்டு மகிழ அங்கே வந்து ஆடினான்.

*புனித மங்கள பூரண மயில் நோக்க*
*முனிவரஞ்சலித்து*
*அரஹரஹரவென மொழியப்*
*பனிபரந்த கண் அடியார் மற்று யாவரும்*
*பரவத்*
*தனியமைந்து நன்னடம்புரி மயில்*
*தகவாடும்*

முனிவர்கள் சிரமேல் கரங் குவித்து அரஹரா என்று துதித்தனர். அடியார்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிய, புனிதமும் மங்களமும் பூரண ஞானவடிவுமான மயிலாகிய தேவி கண் கொட்டாமல் கண்டு மகிழ அந்த மயில், தோகை விரித்து குதித்தாடியது.

மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை இயற்றிய மயிலாடுதுறை தல புராணம் 1868ம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகம் டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் நூலகத்தில் ஒரே ஒரு பிரதி இருக்கிறது.

ஒருநாள் அந்த மயில் பூஜை செய்யும் போது வரவில்லை. உமாதேவியார் தவித்துப் போனார். "என்ன குற்றம் நேர்ந்தது? ஏன்

## 4 தெய்வத்தமிழ் நாட்டினிலே

மயில் வரவில்லை?" என்று மனம் ஏங்கிய போது, சிவபெருமான் கருணையோடு காளை மீது காட்சி தந்தார். "எதிரே உள்ள தீர்த்தத்தில் நீராடு" என்று சொன்னார். மயிலம்மை காவிரித்துறையில் நீராடியதும், மயிலுருவம் நீங்கி தெய்வ வடிவுடன் பேரழகும் ஒளியும் பொருந்தியவளாய், சிவபெருமானை அடைந்தாள். சிவமும் சக்தியும் இணைந்த இந்த உமா மஹேச்வர வடிவம், ஸகல மங்களங்களையும் எல்லா உயிர்களுக்கும் அளித்துக் காப்பாற்று வதால், நமது மனத்தில் இருத்திப் பிரார்த் திப்போம்.

நாவுக்கரசரின் அகத்துறைப் பாடல் கள் நெஞ்சை உருக்குபவை. பரமாத்மாவை அடைய இடையறாது ஏங்கும் ஜீவனின் தாபத்தை, நாயக நாயகி பாவமாக அமைத்துச் சொல்வது ஒரு மரபு.

வெள்ளந்தாங்கும் சடையனான மயி லாடுதுறை வள்ளலை நினைத்து நினைத்து, உள்ளம் உருகுகிறாள் தலைவி. காதல் மிகுதியால் உடல் மெலிந்து விடுகிறது. வளைகள் கழன்று வீழ்ந்து விடுகின்றன. அழகிய மேனி பசலை பூத்து நிறமிழந்து விடுகிறது. சித்தம் அவனருளுக்காக ஏங்கி நொந்திருக்கிறது. 'இதற்கெல்லாம் என்ன மருந்து? என்ன செய்தால் இவர் மனம் தேறுவாள்' என்று யோசிக்கிறாள் அவள் அன்னை.

திடீரென்று ஒரு பரிகாரம் தோன்றுகிறது. 'மயிலாடுதுறை அரனின் பொன்நிறச் சடையில் பொலிகின்றதே கொன்றைக் கண்ணி! அதைக் கொண்டுவந்து இவளிடம் கொடுத்தால் போதும். அந்தக் கொன்றை மலர் மாலையைத் தன் மார்போடு அணைத்துக் கொள்வாள். அதன் மணத்தை நுகர்ந்த மாத்திரத்திலேயே, என் செல்வ மகளின் உள்ளம் தேறிவிடும். கைகளில் வளைகள் கழன்று விழாமல் கலகலக்கும். இவளுடைய பசலை பூத்த மேனி மீண்டும் மினு மினுப்பாகிவிடும்' என்று அன்னை நினைத்துக் கொள்வதாகப் பாடல்.

*சித்தம் தேறும் செறிவளை சிக்கெனும்*
*பச்சை தீரும் என் பைங்கொடி -*
*பால்மதி*
*வைத்த மா மயிலாடுதுறை அரன்*
*கொத்தினில்பொலி கொன்றை*
*கொடுக்கிலே!*



கொடுத்தால் என்பதைக் 'கொடுக்கிலே' என்று ஒரு ஏகாரத்துடன் முடிப்பது இலக்கணத்துக்காக மட் டும் அல்ல.

யாராவது அந்தக் கொன்றைக் கண் ணியைக் கொண்டு வந்து தரக்கூடாதா? இந்தச் செல்வி, என் பசுங்கொடியின் உட லும் மனமும் தேறி விடுமே என்ற ஏக்கமும், ஈசனு டைய அருள் தன் மகளுக்குக் கிடைக்க வேண்டுமே என்ற தாபமும்கூட,' அந்த ஏகாரத்தில் தொனிக்கிறது.

(தொடரும்)

• மயூரநாதர்

# அமெரிக்காவின் நஷ்டம், சீனாவின் லாபம்!

ஷென்சூ - 5 என்ற பெயர் கொண்ட சீனாவின் விண்கலம் சமீபத்தில் உலகை பதிநான்கு முறை வலம் வந்திருக்கிறது. இருபத்தியொரு மணி நேரம் இப்படி அந்த விண்கலம் உலகைச் சுற்றியபோது, அதற்குள் ஒரு மனிதனும் (யாங் லீவெய் என்ற சீன விண்வெளி வீரர்) இருந்தான் என்பதே சரித்திரம் தான். இது தொடர்பான வேறு சில சுவாரசியமான விவரங்களும் சமீபத்தில் வெளியாகி உள்ளன.

சீனாவின் சமீபத்திய விண்வெளி சாதனைக்கு ஒரு விதத்தில் அமெரிக்காதான் காரணம், என்ற புதுக் கதை எழுந்திருக்கிறதே. அது என்ன?

சின் ஹூ ஷென் என்ற ராக்கெட் விஞ்ஞானிதான் சீனாவின் இந்தச் சாதனைக்கு அஸ்திவாரம் போட்டவர். மிகவும் சுவாரஸ்யமான பின்னணி இவருக்கு. 1911ல் கிழக்குச் சீனாவில் உள்ள ஹாங் ஜவ் என்ற நகரில் பிறந்த இவருக்கு, அமெரிக்காவில் மேற்படிப்புக்காக உதவித் தொகை கிடைத்தது. அங்கே படித்த பிறகு கலிஃபோர்னியாவில் உள்ள தொழில் நுட்ப மையத்தில் பேராசிரியரானார்.

இரண்டாம் உலகப் போரின்போது, அமெரிக்க ராணுவத்துக்காக பல நவீன ஏவுகணைகளை உருவாக்கியதில், இவரது பங்கு முக்கியமானது. இவரது திறமையை உணர்ந்து கொண்ட அமெரிக்க அரசு இவரை ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பி, அங்குள்ள ராக்கெட் தொழில் நுட்பங்களை அறிந்துவரச் செய்தது. முக்கியமாக ஜெர்மனியில் சில காலம் தங்கி, பல ராக்கெட் ரகசியங்களை அறிந்து வந்தார் இவர்.

உலகப் போருக்குப் பிறகு இவர் திருமணம் செய்து கொண்டது ஒரு சீன மங்கையைத்தான். அப்போதைய சீன அரசின் ராணுவ ஆலோசகரின் மகள் இவள். அமெரிக்க அரசு தனது சந்தேகப் பார்வையை இவர் மேல் பதித்தது.

1949ல் அமெரிக்கக் குடிமகனாவதற்கு இவர் விண்ணப்பித்தார். இந்தக் காலகட்டத்தில் சீனாவில் பெரும் மாறுதல்கள். மாஸேதுங் தலைமையிலான அணி அப்போதைய சீன அரசைத் தோற்கடித்து அரசமைத்தது. அமெரிக்காவில் கம்யூனிஸத்துக்கு எதிர்ப்பு அலை பலமாக வீசியது. சின் ஹூ ஷென்னிடமிருந்து கம்யூனிஸ்ட் உறுப்பினர் அட்டை ஒன்றைப் பறிமுதல் செய்தது அமெரிக்க அரசு. தான் ஒரு கம்யூனிஸ்ட் அல்ல என்று மறுத்தார் இவர். என்றாலும் கைது செய்யப்பட்டார். குறிப்பிட்ட குற்றச்சாட்டு எதையும் இவர்மீது சுமத்தாமலேயே, ஐந்து வருடங்கள் இவரை வீட்டுக் காவலில் வைத்தது அமெரிக்க அரசு. பிறகு 1955ல் இவர் சீனாவுக்கு அனுப்பப்பட்டார்.

சீனாவுக்குப் போன நான்கே மாதங்களில் விண்வெளி ஆராய்ச்சியை வேகப்படுத்த வேண்டி, அப்போதைய சீன அதிபர் சூ யென் லாய்க்கு கடிதம் எழுதினார். ஏற்றுக் கொண்டது அரசு. "ராக்கெட்டுகளின் ராஜா' என்று அழைக்கப்படும் இவரை, சீன அரசு பெரிய அளவில் கௌரவித்திருக்கிறது. எனினும் பொது விழாக்களில் கலந்து கொள்வதில்லை என்பதைக் கொள்கையாக வைத்திருக்கிறார்.

**மனிதனை ஏற்றிக் கொண்டு விண்வெளிக் கப்பல் ஒன்று பறப்பது என்பது, இது இருநூற்றி நாற்பத்தியோராவது முறை. அப்படியிருக்க சீனா இப்படி முதல்முறையாக ஒரு முயற்சியில் ஈடுபட்டதில் என்ன பெரிய விசேஷம்?**

இதுவரை இப்படிப்பட்ட முயற்சிகளில் இறங்கியவை சோவியத் யூனியனும், அமெரிக்காவும் மட்டுமே. பிற நோக்கங்களும் உண்டு என்றாலும், ஒரு

விதப் போட்டி மனப்பான்மை யில்தான் இந்த இரண்டு நாடுகளும் பலவித விண்வெளி சாகசங்களில் ஈடுபட்டன. அப்படியில்லாமல், இப்போதைய வித்தியாசமான சூழலில் சீனா இந்த முயற்சியில் ஈடுபட்டிருப்பது, ஒரு சாதனைதான்.

***அதென்ன 'வித்தியாசமான' சூழல்?***

சோவியத் யூனியன் சிதைந்துபோனபின் அதன் பொருளாதார வீழ்ச்சி காரணமாக, விண்வெளிப் பரிசோதனைகளில் ஈடுபடுவது மிகக் குறைந்துவிட்டது. அமெரிக்காவுக்கு உலகிலுள்ள நாடுகளில் போரிடவும் சமாதானம் பேசவுமே நேரம் போதவில்லை. தவிர, சர்வதேச விண்வெளி நிலையம் நிறுவுவது, நாஸாவின் முயற்சிகள் ஆகியவற்றில் அடக்கி வாசிக்கத் தொடங்கியிருக்கிறது அமெரிக்க அரசு. இந்தக் காலகட்டத்தில் சத்தம் போடாமல் இப்படி ஒரு காரியத்தில் சீனா இறங்கியது வித்தியாசமான ஒன்றுதானே.

• டைகோனாட்ஸ்



***அமெரிக்க விண்வெளி வீரரை 'அஸ்ட்ரனாட்' என்பார்கள். ரஷ்ய விண்வெளி வீரரை 'காஸ்மனாட்' என்பார்கள். சீன விண்வெளி வீரரை இந்த இரண்டில் எப்படி அழைப்பதாம்?***

ஏன் மூன்றாவதாக ஒரு பெயர் இருக்கக்கூடாதா? சீன அரசு தனது விண்வெளி வீரரை 'டைகோனாட்' என்று அழைக்கிறது. 'டைகாம்' என்றால் சீன மொழியில் விண்வெளி என்று அர்த்தம்.

***சீனா ரொம்ப நவீனமாகிவிட்டதோ?***

சந்தேகமென்ன? ஆனால் சமீபத்தில் விண்வெளிச் சாதனையைக் கூட, அத்தைப்பாட்டி கதை ஒன்றுடன் இணைத்து சந்தோஷப்படும் சீனர்கள் அதிகம். நம்ம ஊர் காக்கா நரி- வடை கதை மாதிரி, சீனாவில் வேறு ஒரு கதை மிகப் பிரபலம். மந்திரசக்தி உள்ள ஒரு பாட்டி, சக்திவாய்ந்த ஒரு திரவத்தைக் குடித்துவிட்டு மேலெழும்பி, நிலாவுக்குப் போய் அங்கேயே தங்கிவிட்டாளாம். அவளைத்தான் 'சந்திர தேவதை' என்கிறார்களாம். இந்தக் கதையைக் குறிப்பிட்டு 'விண்வெளியைத் தாண்டும் விருப்பம் எங்களுக்குக் கல் தோன்றி மண் தோன்றாக் காலத்துக்கு முன்பே உண்டு' என்று கூறி மகிழ்கிறார்கள்.





***சீனா இந்த விண்வெளி சாதனையைச் செய்ததன் நோக்கம் என்ன?***

ஆசியாவில் ஜப்பான், இந்தியா ஆகியவற்றைவிடத் தான் ஒரு சூப்பர்பவர் என்பதை அழுத்தமாக அறிவிக்கும் ஒரு முயற்சி இது என்றும் கொள்ளலாம். தவிர, வருங்காலத்தில் சீனாவின் ராணுவத்திற்கும் இது போன்ற முயற்சிகள் உதவும். விண்வெளி நிலையங்களை வருங்காலத்தில் நிறுவுவதன்மூலம் பல ஒற்று வேலைகளில் சீனா இறங்கலாம். விண்வெளிச் சுற்றுலாக்களையும் சீன அரசு விரைவில் அரங்கேற்றும்.

அடுத்ததாக அனுப்பவிருக்கும் 'ஷென்சூ - 6' விண்கலத்தில் (ஷென்சூ என்றால் தெய்வீகக் கப்பல் என்று சீன மொழியில் அர்த்தம்) மூன்று மனிதர்கள் செல்வார்கள் என்று அறிவித்திருக்கிறது சீனா.

**- ஜி.எஸ்.எஸ்**

# ஜில் ஜில் சாரல்!



✉ "பத்து வயதுச் சிறுவன் ஜனார்த்தனன் வரைந்த ஓவியங்களா?" என்று ஆச்சரியத்துடன் அடுத்தப் பக்கத்தைப் புரட்டியபோது, என் மனம் அதிர்ந்து விட்டது. கை, கால் ஊனமடைந்த நிலையிலும், மன உறுதியோடு செயல்படுவது பாராட்டக் கூடியது.
சேலம், சியாமளா ஈஸ்வரன்.

✉ 'ஒரு கதவை மூடினால் இன்னொரு கதவை ஆண்டவன் திறப்பான்' என்று சொல்வார்கள். 'ஜனா'வின் வாழ்வில் அது உண்மையானதை அறிந்து நிம்மதி அடைகிறோம்.
திருவாரூர், கே.ஆர். சேகர்.

✉ 'நேருக்கு நேர் எந்த இடத்தில் கூடாது?' என்ற கேள்விக்கான தராசின் பதிலை ரொம்பவும் ரசித்தோம். நல்ல டைமிங்கான பதில். வெல்டன்!
மொரட்டுப்பாளையம்,
இரா.வி. சௌந்தர்யா.



✉ 'அன்னை புனிதராகிறார்!' கவர் ஸ்டோரி படித்ததும் ஆனந்தக்கண்ணீர் விட்டேன். வாடிகன் நகரில் அன்னைக்குக் கொடுத்த கௌரவத் துக்கு, 'கல்கி' பெருமை சேர்த்து விட்டது.
கோலார் தங்கவயல், மு.ரா. பாலாஜி.

✉ இக வாழ்க்கையே விடுதி வாழ்க்கையின் பரிணாமம் தானே. அதை இசைபட தொனிக்க வைத்த 'விடுதி' சிறுகதை, மனவிடுதிக்குள் நினைவாகப் பதிந்துவிட்டது.
ஆடுதுறை, கோ. ராமதாஸன்.

✉ டி.வியில் தீபாவளி சிறப்பு நிகழ்ச்சிகளைக் காண முடியாத சூழ்நிலையில் இருந்த எனக்கு, 'ரிமோட்' மூலம் அக்குறை தீர்ந்தது. நிகழ்ச்சிகளின் சக்கையை விட்டுவிட்டு, 'ஜில்' என்ற சாற்றை மட்டும் பிழிந்து தந்தது சூப்பர்!
ராஜபாளையம், வே. ஈஸ்வரன்.

✉ 'சபாநாயகர்' என்பதற்கு ப.சிதம்பரம் விளக்கம் கொடுத்துள்ளதைக் கண்டபிறகாவது, நிகழ்கால, எதிர்கால சபாநாயகர்கள் அது போல் நடந்து கொள்வார்களா?
திருப்பனந்தாள், ஜி. மதுரபாஷினி.

✉ திருச்சி மாவட்டம் குணசீலம் கோவிலில் இருக்கும் பெருமாள் கையில் வேல் இருப்பதாக ஒரு வாசகர் எழுதியிருக்கிறார். அது தவறு. குணசீலப் பெருமாளின் கையில் இருப்பது தங்கத்தால் ஆன செங்கோல். இந்தச் செங்கோல் எல்லா நோய்களையும் தீர்த்து மனச் சாந்தியையும் அளிக்கக் கூடியது.
சேலம், ஜெயலட்சுமி நாராயணன்.

✉ 'டும் டும் சேவை' என்ற தலைப்பில் நாங்கள் செய்து வரும் இலவசத் திருமணச் சேவையைப் பற்றிக் கட்டுரை வெளியிட்டுள்ளீர்கள். நன்றி. அதில் சிறு திருத்தம். நாங்கள் ஆரிய வைஸ்ய சமூகத்தாருக்கு மட்டுமே ஜாதகப் பரிவர்த்தனை செய்கிறோம்.
முசிறி, மு.கி. முனுசாமி.

✉ உங்கள் தயவால் கவிதாயினிகள் வளர்வது மகிழ்ச்சியான செய்தி. 'விழுவதும் எழுவதும்' எழுச்சி தரும் கவிதை!
பெங்களூர் - 38, தாமல் கண்ணன்.

✉ 26.10.03 இதழில் 'பின் விளைவுகள்' சிறுகதை படித்தேன். யதார்த்தம் என்ற போர்வையில் பிற்போக்கான கருத்து முன் வைக்கப்பட்டிருக்கிறது. அவல சமுதாயத்தின் விலங்குகளை தைரியமாக உடைத்துப் பொங்கி எழுந்த பெண் அர்ச்சனாவையும், முதுகெலும்பு இல்லாமல், பெற்றோர் பின்னால் பதுங்கி நசுங்கிய முரளியையும், ஒரே சீராக உருவகப்படுத்தலாமா!
சென்னை - 202, ந. தர்மேசுவரன்.



# சிவகாமியின் சபதம்

### முப்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

## வாதாபி தகனம்

மாமல்ல சக்கரவர்த்தி தமது கூடாரத்தின் வாசலில் நின்று மாபெரும் பல்லவ சைன்யம் வாதாபிக் கோட்டை மதிலை நெருங்கிச் செல்லும் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். தமது வாழ்நாளிலேயே மிக முக்கியமான சம்பவம் தம் கண் முன்னால் நடைபெறத் தொடங்கியிருக்கிறது என்பதை அவருடைய அந்தராத்மா அவருக்குச் சொல்லிக் கொண்டிருந்தது. அன்றிரவு நடக்கப் போகும் மகத்தான கோட்டைத் தாக்குதலின் காரணமாக ஆயிரமாயிரம் வருஷங்கள் வரையில் அவருடைய பெயர் 'வாதாபி கொண்ட நரசிம்மன்' என்று சரித்திரத்தில் பிரசித்தி பெற்று விளங்கப் போகிறது.

ஆனால், அவர் எந்த நோக்கங் காரணமாக இந்த மகத்தான சைனியத்தைத் திரட்டிக் கொண்டு வந்தாரோ, அந்த நோக்கம் நிறைவேறுமா? சிவகாமிக்கு அவர் கொடுத்த வாக்குறுதி அன்றிரவோ மறுநாளோ நிறைவேறுவது நிச்சயம். மூன்று நாளைக்குள்ளே வாதாபிக் கோட்டை தகர்ந்து வாதாபி நகரம் பற்றி எரிவது நிச்சயம். ஆனால், அதைப் பார்ப்பதற்குச் சிவகாமி உயிரோடிருப்பாளா? ஆஹா! அந்தப் பாவி உயிரோடிருந்து வாதாபி எரியும் காட்சியைப் பார்த்துவிட்டு வெளியேறி வந்தால்தான் என்ன? அவளுடைய வாழ்க்கை பழைய ஆனந்த வாழ்க்கையாகப் போகிறதா? ஒருநாளும் இல்லை. அவளுடைய மனோராஜ்யமெல்லாம் ஒரு சிதைந்த கனவாகிவிட்டது. ஒருவேளை அந்தச் சிதைந்த கனவிலே

**அமரர் கல்கி**

சிவகாமி சில சில சமயம் இன்பத்தைக் காணக்கூடும். தமக்கோ அதுகூடக் கிடையாது. தமது பிற்கால வாழ்க்கை ஒரு வறண்ட பாலைவனமாகவே இருக்கும். அந்த எல்லையற்ற நெடிய பாலைவனத்தில் கானல் நீரைத் தவிர வேறு குளிர்ச்சியான காட்சியே தென்படப் போவதில்லை!

இவ்விதச் சிந்தனைகளில் ஆழ்ந்திருந்த



மாமல்லர், தம்மிடம் முடிவாக விடை பெற்றுச் சென்ற பரஞ்சோதி மீண்டும் வருவதைக் கண்டு சிறிது வியப்புற்றவராய், அவர் தம் அருகில் நெருங்கியதும், "சேனாதிபதி! ஏதாவது புதிய விசேஷம் உண்டா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! சத்ருக்னன் திரும்பி வந்தான்" என்று சேனாதிபதி கூறி, அவன்



சொன்ன விஷயங்களைச் சுருக்கமாகத் தெரிவித்தார்.

எல்லாவற்றையும் கேட்ட மாமல்லர், "இந்தச் செய்திகள் காரணமாக நமது யோசனையில் ஏதேனும் மாறுதல் உண்டா?" என்று கேட்டார்.

"விசேஷமாக ஒன்றுமில்லை, பிரபு! ஆனால், கோட்டைத் தாக்குதலைக் கூடிய விரைவில் நடத்த வேண்டிய அவசியம் அதிகமாகிறது. எதிரில் பாயும் புலியைக் காட்டிலும் காலடியில் நெளிந்து ஓடும் பாம்பு அதிக அபாயம் உள்ளதல்லவா?"

"அப்படியானால் காபாலிகையின் கதையை நீர் நம்புகிறீரா? உமக்கு யுத்தச் சீட்டு அனுப்பியது புலிகேசி இல்லை. நாகநந்தி பிக்ஷுதான் என்று நினைக்கிறீரா?



அப்படியானால் சிவகாமி தேவி பற்றிய கவலை அதிகமாகிறது. நானும் உங்களுடனே கோட்டைக்குள் இப்போதே வந்து விடட்டுமா?''

"வேண்டாம், பிரபு! தாங்கள் இங்கே இருப்பதுதான் உசிதம் என்று கருதுகிறேன்."

எது எப்படிப் போனாலும் இந்தத் தடவை தளபதி பரஞ்சோதி சிவகாமி தேவியைத் தாமே முதலில் சந்திக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தார். முன்தடவை மாமல்லர் சிவகாமியைச் சந்தித்துப் பேசியதன் விபரீத விளைவை அவர் மறந்து விடவேயில்லை. அம்மாதிரி இம்முறை ஏற்படாமல் தடுப்பது தம் கடமையெனக் கருதினார்.

மாமல்லரும் பல காரணங்களினால் சிவகாமியை உடனே சந்திக்க விரும்பவில்லை. எனவே, அவர் பின்வருமாறு கூறினார்:

"அப்படியே ஆகட்டும், சேனாதிபதி! ஒரு விஷயத்தை மறந்துவிட வேண்டாம். புலியைவிடப் பாம்பு கொடியது என்று நீர் கூறியது முற்றும் உண்மை. நாகநந்தி விஷயத்தில் தாட்சண்யமே பார்க்க வேண்டாம். அந்தக் கள்ள பிக்ஷு உயிரோடிருக்கும் வரையில் இந்த வாழ்க்கையில் நம் இருவருக்கும் நிம்மதி கிடையாது. இதை மறக்க மாட்டீர் அல்லவா?''

"மறக்க மாட்டேன், பிரபு!"

இதற்குப் பிறகும் சேனாதிபதி தயங்கி நிற்பதைக் கண்டு மாமல்லர், "இன்னும் ஏதாவது சொல்லுவதற்கு இருக்கிறதா?'' என்றார்.

பரஞ்சோதி, "ஆம். இன்னும் ஒரே ஒரு விஷயம். மன்னிக்க வேண்டும். வாதாபி நகரை எரித்து விட வேண்டும் என்ற கட்டளையில் மாறுதல் ஒன்றும் இல்லையே?'' என்று கேட்டார்.

"சேனாதிபதி! போதும்! இந்த நிமிஷமே நான் கோட்டை வாசலுக்குப் போகிறேன். இனி உம்மை நம்பிப் பயனில்லை. நீர் திருநீறு தரித்து ருத்ராட்சம் அணிந்து சிவபஜனை செய்யச் செல்லும்!''

"பிரபு! திருநீறு தரித்த பெருமான் திரிபுரத்தையே எரித்தார். இந்த வாதாபியை எரிப்பது அவருக்குப் பெரிய காரியமில்லை. இன்று இரவே வாதாபி நகரம் பற்றி எரிவதைக் காண்பீர்கள்!"

"அப்படியானால் ஏன் இந்தத் தயக்கம், கேள்வி எல்லாம்?''

"தங்களுடைய விருப்பத்தை நிச்சயமாகத் தெரிந்து கொள்வதற்காகத்தான். கோட்டைக்குள் புகுந்த பிறகு நகரை எரிக்க வேண்டும் என்று தாங்கள் கட்டளையிட்டீர்கள். அதை மாற்றிச் செய்ய விரும்புகிறேன். முதலில், வாதாபி தகனம் ஆரம்பமாகப் போகிறது. வெளியிலிருந்தபடியே நெருப்புப் பந்தங்களை நகருக்குள் எறியும்படி கட்டளையிடப் போகிறேன்."

"இதற்கு என்ன அவசியம்?''

"நகரத்துக்குள்ளேயிருந்து நம் வீரர்கள் கொண்டு வரும் பொருள்களில் பாதி அவரவர்களுக்கே சொந்தம் என்று சொல்லியிருக்கிறேன். ஆகையால், நகரம் பற்றி எரிவதைக் காணும்போது நம் வீரர்களின் வேகம் ஒன்றுக்குப் பத்து மடங்காகும். பிரபு! நாளைச் சூரியோதயத்துக்குள்ளே நான் இந்தக் கோட்டைக்குள்ளே பிரவேசித்தாக வேண்டும். அதற்கு மேல் தாமதித்தால் சிவகாமி தேவியைக் காப்பாற்றுவது அசாத்தியமாகி விடலாம். சூரியோதயமாகும் சமயத்தில் தாங்களும் ஆயத்தமாயிருக்க வேண்டும். இன்று ஓரிரவு தூங்காமல் வாதாபி தகனத்தைப் பார்த்துக் கொண்டிருங்கள்!'' என்று சொல்லி விட்டுச் சக்கரவர்த்தியின் மறுமொழிக்குக் காத்திராமல் சேனாதிபதி விரைந்து சென்றார்.

சேனாதிபதி சொன்னபடியே அன்றிரவு நடுநிசி நேரத்தில் வாதாபி தகனம் ஆரம்பமாயிற்று. கோட்டை மதிளைச் சுற்றி ஆங்காங்கு பெரிய உயரமான தூக்கு மரங்கள் நிறுத்தப்பட்டன. அந்த மரங்களின் மீது ஏறி நின்று அதற்கென்று பயிற்சி செய்யப்பட்டிருந்த பல்லவ வீரர்கள், கொளுத்தப்பட்ட தீப்பந்தங்களையும் கந்தக வெடிகளையும் நகருக்குள் வீசி எறிந்தார்கள். தீப்பந்தங்கள் போகும்போதே காற்றினால் ஜுவாலை விட்டுக் கொண்டு சென்று விழுந்த இடங்களில் எல்லாம் குபீர் குபீர் என்று தீ மூட்டின. கந்தக வெடிகள் ஆங்காங்கு வெடித்து நெருப்பைப் பரப்பின.

அன்றிரவு மூன்றாம் ஜாமத்திற்குள் இலட்சோப இலட்சம் ஜனங்கள் வசித்த அந்த வாதாபி மாநகரத்தில் நாற்புறமும் தீ

மூண்டு எரியத் தொடங்கியது.

அக்கினிதேவனுக்கு உதவி செய்ய வாயு பகவானும் வந்து சேர்ந்தார். மூண்டடித்த காற்றினால் தீயின் ஜுவாலைகள் குதித்துக் குதித்துப் பாய்ந்து வாதாபி நகரின் மாட மாளிகைகள் கூட கோபுரங்கள் எல்லாவற்றையும் விரைந்து விழுங்கத் தொடங்கின.

தீயோடு புகையும் படலம் படலமாக எழுந்து எட்டுத் திசைகளையும் வானத்தையும் மறைத்தது.

அதே சமயத்தில் பல்லவ, பாண்டிய வீரர்கள் கோட்டையை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு மதிள் மீது ஏறிக் குதிக்க முயன்றார்கள். மதிள் மீதிருந்த சளுக்க வீரர்கள் அவர்களைத் தடுத்தார்கள். அவர்களுடைய வாளாலும் வேலாலும் அம்புகளாலும் தாக்கப்பட்டு ஆயிரமாயிரம் தமிழ் வீரர்கள் உயிரிழந்து விழுந்தார்கள். ஆயினும் சமுத்திரத்தில் பெருங்காற்று அடிக்கும்போது ஓர் அலைக்குப் பின்னால் இன்னோர் அலை இடைவிடாமல் வந்து கரையை மோதுவது போலத் தமிழ் வீரர்கள் மேலும் மேலும் வந்து கொண்டேயிருந்தார்கள்.

அதோடு கோட்டையின் நாலுபுறத்து வாசல்களும் பலமாகத் தாக்கப்பட்டன. ஏக காலத்தில் பத்துப் பன்னிரண்டு யானைகள் தங்கள் துதிக்கையினால் பிரம்மாண்டமான மரத் தூண்களையும் இரும்புலக்கைகளையும் தூக்கி ஆவேசமாகக் கோட்டை வாசல் கதவுகளின் மீது மோதியபோது அந்தக் கதவுகள் படார் படார் என்று தெறித்து முறிந்து விழுந்தன.

சேனாதிபதி பரஞ்சோதி சக்கரவர்த்தியிடம் கூறிய வண்ணமே அன்றிரவு நாலாம் ஜாமம் முடியும் தறுவாயில் வாதாபிக் கோட்டை வாசல்களைத் தகர்த்த பல்லவ வீரர்கள், ஏற்கெனவே எரியத் தொடங்கியிருந்த வாதாபி நகருக்குள் பிரவேசித்தார்கள்.

கோட்டை மதிளைத் தாக்கிய பல்லவ வீரர்களும் நாற்புறத்திலும் உள்ளே குதிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

வாதாபி நகரம் தீக்கிரையாகும் இந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவத்தைக் கீழ் வானத்தில் உதித்திருந்த விடிவெள்ளி கண் கொட்டாமல் பார்த்து வியந்து கொண்டிருந்தது. (தொடரும்)

## அருள்வாக்கு

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நாலில் தர்மத்துக்கு அடுத்தது அர்த்தம். 'அர்த்தம்' என்பதற்கு இங்கே அர்த்தம், நடைமுறை வாழ்க்கை நடத்துவதற்குப் பிரயோஜனமாகிற பொருட்கள் என்பதே. வாழ்க்கை நடப்பதற்கு வீடு, வஸ்திரம், ஆஹார தானியம் முதலிய என்னவெல்லாம் வாங்குகிறோமோ, அவையெல்லாம் 'அர்த்தத்'தில் சேர்ந்தவைதான். இப்படி வாங்குவதற்காக நாம் ஸம்பாதிக்கிற பணத்துக்கும் 'அர்த்தம்' என்று பெயர். நடைமுறை வாழ்க்கை வாழ்ந்து என்றைக்கோ ஒருநாள் செத்துப் போய்விட்டு, மறுபடி இதே மாதிரி பிறந்து கொண்டிருப்பதற்கே இந்த 'அர்த்தம்' என்று ஆக்கிக் கொண்டு விட்டோமானால், அப்போது அது அனர்த்தந்தான். 'அர்த்தம் அநர்த்தம் பாவய நித்யம்' என்பதாக இந்த உண்மையைத்தான் நினைவூட்டிக் கொள்ளும்படி ஆசார்யாள் 'பஜகோவிந்தத்'தில் உபதேசித்திருக்கிறார். இதில்லாவிட்டால் வாழ முடியவில்லை. ஆத்மாவை, பரமாத்மாவைத் தெரிந்து கொள்வதற்காக எல்லாரும் ஸந்நியாஸியாகப் போய்விட்டால், யார் அவர்களுக்கு பிக்ஷை பண்ணுவது? அதனால் ஸம்பாதித்துத்தான் ஆக வேண்டும் என்பதற்காகவே 'அர்த்த'த்தில் ஈடுபட வேண்டும். ஸாதாரண மநுஷ்யர்களாக இருக்கப்பட்டவர்கள் எல்லாருக்கும் இருக்கக்கூடிய சில ஆசைகளையும் மிஞ்சிப் போகும்படி விடாமல், அந்த ஆசைகளின் பூர்த்திக்காகவும் "அர்த்த'த்தை நாடிச் சேர்த்துக் கொள்ளத்தான் வேண்டும். இங்கே 'அர்த்தம்' என்பது அதற்கு அடுத்ததாக வரும் 'காம'த்துடன் சேர்கிறது. ஆனால் அதோடேயே நின்று விடக் கூடாது; முடிவாக உள்ள புருஷார்த்தமான மோக்ஷத்தை மறந்து 'அர்த்தம்' என்பதிலேயே தலைதெறிக்கப் போய் விழப்படாது. எனவே இதற்கெல்லாம் அடிப்படையாக முதலில் வரும் 'தர்ம'த்தில் ஆரம்பத்திலிருந்தே பிடிப்பு இருக்க வேண்டும்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# தேவை ஓர்

**வா**க்குச்சாவடிக்குள் நுழையும்போது ஒரு வாக்காளர் எதைச் சிந்தித்து வாக்களிக்கிறார்?

தன் மனத்திற்கு விருப்பமான கட்சியைப் பற்றி நினைக்கிறார். அந்தக் கட்சியில் அவர் உறுப்பினராக இருந்தால், யாருக்கு வாக்களிப்பது என்ற கேள்வியே எழுவதில்லை. அந்தக் கட்சியில் அவர் உறுப்பினராக இல்லையென்றால், அந்தக் கட்சியைப் பற்றி அவருக்கு நல்ல அபிப்பிராயம் இருக்கலாம். உதாரணமாக, அ.இ.அ.தி.மு.கவை இன்னும் 'எம்.ஜி.ஆர் கட்சி' என்று பலர் கருதுகிறார்கள். 1991-ஆம் ஆண்டுத் தேர்தலில் காங்கிரஸ்- அ.இ.அ.தி.மு.க கூட்டணியின் வேட்பாளர் ஒருவர், சேலம் மாவட்டத்தில் ஒரு தொகுதியில் பிரசாரம் செய்து கொண்டிருந்தார். ஒரு கிராமத்தில் சில பெண்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு "உனக்கே வோட்டுப் போடுகிறோம் ராஜா, ஒரு தடவை அந்த மகராசன் எம்.ஜி.ஆரை எங்கள் ஊருக்குக் கொண்டாந்து காட்டுப்பா" என்றார்களாம்!

இந்தியாவுக்கு விடுதலை பெற்றுத் தந்த கட்சி என்ற காரணத்திற்காகவே, காங்கிரஸ் கட்சிக்கு வாக்களிப்பவர்கள் இன்றும் இருக்கிறார்கள். தமிழுக்காகவும், தமிழினத்திற்காகவும் பாடுபடும் ஒரே கட்சி தி.மு.க என்ற கருத்து, பலர் மத்தியில் இன்றும் நிலவுகிறது. அந்தக் கட்சிகளுக்கு வாக்களிப்பதற்கு இவையே போதுமான காரணங்களாகக் கருதப்படுகின்றன.

ஒருவர் வாக்களிப்பதற்குக் காரணம் கட்சி. இன்னொரு காரணம் கட்சியின் தலைமை. ஒரு கட்சியின் தலைவருக்கு விசேஷமான ஈர்ப்பு சக்தி இருக்குமென்றால், அதுவே அவருடைய கட்சிக்கு வாக்குகளைச் சேகரித்து விடுகிறது. ஜவாஹர்லால் நேரு, இந்திரா காந்தி (1971), எம்.ஜி.ஆர் (1977), என்.டி.ஆர் (1983), ராஜீவ்காந்தி (1984) என்று பல உதாரணங்களைச் சொல்லலாம். அண்மைக் காலங்களில் லல்லு பிரசாத் யாதவ், செல்வி மாயாவதி ஆகியோருக்குக் கூட, இந்த ஈர்ப்பு சக்தி இருப்பது போல் தெரிகிறது. அதுவே சில நேரங்களில் விபரீதமான விளைவுகளை ஏற்படுத்தி விடுகிறது.

கட்சி, தலைமை - அவற்றைத் தாண்டி அக்கட்சியின் கொள்கைகள், திட்டங்கள், செயல்பாடுகள், செயல்திறமை ஆகியவற்றைப் பற்றி பெரும்பாலோர் கவலைப்படுவதில்லை.

வேறு சிலர் பணம், பொருள், உணவு ஆகியவற்றை எதிர்பார்த்து வாக்களிக்கிறார்கள்.

சில கட்சிகள் ஒரு சாதியினரின் ஆதரவைப் பெறுவதற்கு விசேஷமான முயற்சிகளை எடுக்கின்றன. எந்தச் சாதியினரும் ஒட்டுமொத்தமாக- அதாவது நூறு சதவிகிதம் - ஒரு கட்சிக்கு வாக்களிப்பதில்லை. ஆனால் ஒரு சாதியைச் சார்ந்தவர்கள், அல்லது ஒரு மதத்தைச் சார்ந்தவர்கள், 70-80 சதவிகிதம் ஒரு கட்சியின் வேட்பாளர்களுக்கு வாக்களித்தால், அதுவே அக்கட்சிக்கு வெற்றி வாய்ப்புகளை அதிகரித்து விடுகிறது. அந்த வாக்காளர்களைத் தன்னுடைய 'வாக்கு வங்கி' என்று அந்தக் கட்சி சொந்தம் கொண்டாடத் தொடங்குகிறது.



**ப.சிதம்பரம்**

**எ**ந்த மாநிலத்தில் கருத்துக் கணிக்கப்பட்டாலும் 'வேலையில்லாமை' பிரச்னைதான் முதலிடத்தைப் பெறுகிறது. ஆனால் எந்தத் தேர்தலிலாவது வேலையில்லாமை பற்றி விவாதம் நடைபெறுகிறதா? வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்கு உங்கள் கட்சி என்ன செய்திருக்கிறது? என்ன செய்யப் போகிறது என்ற கேள்விகளை யாராவது எழுப்புகிறார்களா? இந்தியாவில் நடைபெறும் தேர்தல்களில் அறிவுபூர்வமான சர்ச்சைகள் குறைவு. வேட்பாளர் வாக்காளர் இடையில் அறிவு பூர்வமான கருத்துப் பரிமாற்றங்கள் இடை

யாது. எதிர் அணிகளில் இருக்கும் வேட்பாளர்களிடையே, விவாதங்களே நடப்பதில்லை.

அமெரிக்காவில் இன்று தேர்தல் நடந்தால், எந்தத் தலைப்புகளில் நாடு தழுவிய விவாதம் - தொலைக்காட்சிகளில், பத்திரிகைகளில், பல் கலைக் கழகங்களில், வீடுகளில் - நடைபெறும்? முதல் தலைப்பு ஈராக் போர். இரண்டாவது, தலைக்கு மேல் போய் விட்ட நிதிப்பற்றாக்குறை. இங்கிலாந்தில் இன்று தேர்தல் நடந்தால் எவற்றை விவாதிப்பார்கள்? அரசு மருத்துவத் துறையே முதவிடம் வகிக்கும். அடுத்து, ஈராக் போர், யூரோ நாணயத்தை ஏற்றுக் கொள்ளலாமா, கூடாதா? போன்ற பிரச்னைகள். இந்தப் பிரச்னைகளெல்லாம் அந்த நாடுகளின் பாதுகாப்பு மற்றும் பொருளாதார வளர்ச்சியுடன் நெருங்கிய சம்பந்தமுடையவை. அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடும் வேட்பாளரோ, இங்கிலாந்தில் அடுத்த பிரதமர் என்று முன்னிறுத்தப் பட்ட கட்சியின் தலைவரோ, பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றி ஒவ்வொரு நாளும் பேச வேண்டும். எனக்குப் பொருளாதாரம் பற்றித் தெரியாது என்று சொல்ல முடியாது. 1992-ம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் வேட்பாளர் கிளிண்டன் சொன்ன புகழ்பெற்ற வார்த்தைகள் "அட முட்டாளே, இது பொருளாதாரம் ஐயா!" (It is the economy, stupid)



# அறுவை சிகிச்சை!

இந்தியாவில் நடைபெறும் தேர்தல்களில் பொருளாதாரம் பற்றி ஒரு விவாதம் நடக்கும் என்று எதிர்பார்க்க முடியுமா? கலைஞர் கருணாநிதியும், செல்வி ஜெயலலிதாவும் ஒரே மேடையில் ஏறி, தமிழ்நாட்டின் பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றி விவாதிப்பார்கள் என்று கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

இது போன்ற தேர்தல் முறையில் யார் வெற்றி பெறுவார்கள் என்று சொல்லவும்






வேண்டுமா?

ஒவ்வொரு தலைமுறையிலும் கற்றவர்கள், உயர் கல்வி பெற்றவர்கள், அறிஞர்கள் மற்றும் சாதனையாளர்களின் எண்ணிக்கை கூடுகிறது. ஆனால், தேர்தலுக்குத் தேர்தல், நம்முடைய நாடாளுமன்றம் மற்றும் சட்டமன்றங்களின் தரம் குறைந்து கொண்டு வருகிறது.

தேர்தல் கமிஷனோ, ஒரு சேஷனோ, ஒரு லிங்டோவோ இந்தச் சீரழிவைத் தடுத்து நிறுத்திவிட முடியாது.

நம்முடைய விருப்பு வெறுப்புகள், சார்புகள் ஆகியவற்றை ஒதுக்கி வைத்துவிட்டு, சில கடினமான முடிவுகளை மேற்கொள்ள வேண்டும். இன்று நடைமுறையில் இருக்கும் தேர்தல் விதிகளின்படியே தேர்தல் நடக்கும் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது, யாருக்கு வாக்களிக்க வேண்டும்?

முதலில், எல்லோரும் வாக்களிக்க வேண்டும். குறிப்பாக, வாக்குச் சாவடிக்குப் போகாமல் ஒதுங்கிக் கொள்ளும் மாணவர்கள், படித்தவர்கள், குடும்பத் தலைவிகள் வாக்களிக்க வேண்டும்.

இரண்டாவது, வேட்பாளர்களில் யார் சிறந்தவர், யார் ஒழுக்கமானவர் என்று பார்த்து வாக்களிக்க வேண்டும். அவர் சிறிய கட்சியைச் சேர்ந்தவராக இருக்கலாம்; அவருடைய கட்சிக்கு ஆட்சி அமைக்கக் கூடிய பலம் இல்லாமல் இருக்கலாம். இருந்தாலும், அவரையே தேர்ந்தெடுக்க வேண்டும்.

மூன்றாவது, தேர்தல் பிரசாரத்தில் மிக அதிகமாகச் செலவு செய்கிறவரை ஒதுக்கிவிட்டு, வரம்புக்குள் செலவழிப்பவரையே தேர்ந்தெடுக்க வேண்டும். பெரும்பான்மையான அரசியல்வாதிகளுக்குத் தேர்தல் செலவு என்பது ஒரு வியாபார முதலீடு. அந்த முதலீட்டைப் போல் பல மடங்கு, ஐந்து ஆண்டுகளில் சம்பாதித்து விட முடியும் என்ற நம்பிக்கையில் அவர்கள் செலவழிக்கிறார்கள். அந்த நம்பிக்கையைப் பொய்யாக்க வேண்டும்.

நான்காவது, குற்றவாளிகளுக்கு வாக்களிக்கக் கூடாது. அவர் தண்டனை பெற்ற குற்றவாளியா அல்லது குற்றம் சாட்டப்பட்டவரா என்ற விசாரணையெல்லாம் தேவையில்லை. குற்றங்களில் சம்பந்தப்படாதவர்கள் ஆயிரக்கணக்கானோர் இருக்கும் ஒரு நாட்டில், குற்றங்களில் சிக்கியவர்களுக்கு ஏன் வாக்களிக்க வேண்டும்?

இறுதியாக, இந்தியாவின் தேர்தல் விதிகளை மாற்றுவதை ஆதரிப்பவர்களுக்கு வாக்களிக்க வேண்டும். முதலில் மாற்றப்பட வேண்டிய விதி எது தெரியுமா? யாரும் இரண்டு பதவிக் காலங்களுக்கு மேல் (பத்து ஆண்டுகளுக்கு மேல்) பிரதமராகவோ, முதலமைச்சராகவோ இருக்க முடியாது என்றொரு விதியை இயற்ற வேண்டும். அதேபோல் யாரும் மூன்று பதவிக் காலங்களுக்கு மேல் (பதினைந்து ஆண்டுகளுக்கு மேல்) நாடாளுமன்ற உறுப்பினராக இருப்பதற்கும், சட்டமன்ற உறுப்பினராக இருப்பதற்கும் தடை விதித்துச் சட்டம் இயற்ற வேண்டும். பழையன கழிவதற்கும், புதியன புகுவதற்கும் இதுவே சிறந்த வழி. முப்பத்தைந்து வயதுக்குக் குறைந்தவர்களே எழுபத்தைந்து சதவிகிதம் உள்ள நாட்டில், இளைய தலைமுறையின் உணர்வுகளையும், நவீன உலகத்தின் தேவைகளையும் பிரதிபலிக்கும் தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்க வேண்டும் என்றால், இது போன்ற விதிகளைத் தவிர்க்க முடியாது.

நான் கூறுவது புண்ணுக்குப் புனுகு தடவும் யோசனைகள் அல்ல. நான் ஓர் அறுவைச் சிகிச்சையைப் பரிந்துரைக்கிறேன்.

இந்த அறுவைச் சிகிச்சையைச் செய்யாவிட்டால் இந்திய அரசியலில் ஏற்பட்டுள்ள சீரழிவுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியாது. ஊழலும், வன்முறையுமே இன்றைய அரசியல் உலகின் சின்னங்களாகத் திகழ்கின்றன. ஊழலும், வன்முறையும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் எந்த நாடும், உயர்வடைந்ததாக வரலாற்றுச் சான்று இல்லை.

நம்முடைய உயர்வும், தாழ்வும் நம் கைகளிலேயே இருக்கின்றன.

(தொடரும்)

# அவனுக்கும் அவளுக்கும்...

ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

"என்ன 'கம்'முனு ஆயிட்டீங்க?" என்றாள்.

"இன்றைக்கு எனக்கு தியேட்டருக்குப் போய்ப் படம் பார்க்கிற மூடே இல்லை. டீ.வி.யில லேட்டஸ்ட் ஜேம்ஸ் பாண்ட் படம் போடறான். நொறுக்குத் தீனியைக் கொறிச்சுக்கிட்டே ஆங்கிலப் படத்தை என்ஜாய் பண்ணுவதை விட்டுட்டு" அவன் முணுமுணுத்தான்.

"நா டிரைவ் பண்றேங்க, ப்ளீஸ்" என்று அவள் கேட்கவில்லை.

காரின் கதவை அவன் திறந்துவிட்டதும் சமர்த்தாக பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

பிறகு மெள்ள வாயைத் திறந்தாள்.

"க்ளைமாக்ஸ்ல சண்டை ஸீன் நல்லா எடுத்திருக்காங்க இல்ல?"

"இதெல்லாம் ஒரு சண்டையா? ஜாக்கிசான் படத்துலயும் ஸில்வஸ்டர் ஸ்டாலோன் படத்துலயும் சண்டையப் பாத்துட்டு, இந்தத் தமிழ்ப்பட சண்டையெல்லாம் பாக்க முடியுமா?"

"பாட்டு பரவாயில்லல்ல? இப்ப வர்ற படங்கள்ல உள்ள பாட்டுகளப் பாக்க இது எவ்வளவோ தேவலை, இல்லீங்க?"

"ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை. இதெல்லாம் ஒரு பாட்டா? எம்.எஸ்.விஸ்வநாதன், கே.வி மகாதேவன் மாதிரி வருமா?"

"புதுசா ஒரு வில்லன் வர்றானே, ஆள் வித்யாசமா இருக்கான் இல்ல? நல்ல செலக்ஷன்."

"ஐயே, ஓமக்குச்சி மாதிரி 'வே'ன்னு இருக்கான், என்ன நல்ல செலக்ஷன்?"

"சரி, காமெடியாவது பிடிச்சுதா உங்களுக்கு?"

"தலையெழுத்து. கஷ்டம்டா சாமி."

"என்னங்க, இவ்வளவு சலிச்சுக்கிறீங்க. இந்தப் படத்துல எதுவுமே பிடிக்கலியா உங்களுக்கு?"

"ஓ பிடிச்சுதே. ஹீரோயின். மலையாளப் புதுமுகம். ஆள் ஸ்வீட்டா இருக்கா."

"ஐயோ பாவம்னு இருக்கா. ஐயாவுக்கு ஸ்வீட்டா இருக்காளாமே!"

சிரித்தபடியே தாடையில் ஒரு இடி இடித்தாள்.

"உங்களுக்கும் எனக்கும் ஏங்க டேஸ்ட்ல இவ்வளவு வித்யாசம் இருக்கு!"

வீடு வந்து சேர்ந்தபோது மணி பதினொன்று.



வீட்டை நெருங்கினபோது கேட்டில் ஒரு தடங்கல்.

ஒரு பிளாட்பாரக் குடும்பம், பாதி கேட்டை மறித்துக் கொண்டு படுத்திருந்தது.

படுத்திருந்தவர்களை எழுப்பி நகர்த்தாமல், கார் உள்ளே போக முடியாது.

காரிலிருந்து இறங்கிக் குரல் கொடுத்தான்.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார்கள்.

எழுந்து கொள்ள அழுது அடம் பிடித்த சிறுவனுக்கு இரண்டு அடி விழுந்தது.

ஆழ்ந்த உறக்கத்திலிருந்து அலைக்கழிக்கப்பட்ட இன்னொரு குழந்தை, நடு ராத்திரியின் நிசப்தத்

ஹைத் துவம்சம் செய்கிற மாதிரி குரலெடுத்து அழுதது.

"காரை கேட்டுக்கு வெளியே நிறுத்தியிருக்கலாம். தோணாமல் போச்சு" முணுமுணுத்தான்.

காரை உள்ளே நிறுததிப் பூட்டி விட்டு, "இப்ப நீங்க படுத்தக்கலாம்" என்றான் அவன்.

அந்த ஏழைகளுக்குத் தங்கு தடை யின்றிக் கிடைக்கிற ஒரே விஷய

அவள் ஏதாவது பேசுவாள் என் றால், வீட்டுக் கத வைத் திறந்து உள்ளே பிரவே சித்த பின்னா லும் அவள் மௌனமாயிருந் தாள், வழக்கத் துக்கு மாறாக.



மான உறக்கத்தைக் கூடப் பறிக்க நேர்ந்தது குறித்து அவனுக்கு வருத்த மாயிருந்தது.

அந்த வருத்தத்தைத் தணிக்க

"என்ன 'கம்'முனு ஆயிட்டே?" என்றான்.

"பாவம்ங்க. அவங்களை டிஸ்ட்டர்ப் பண்ணாம காரை நாம வெளியவே நிறுத்தியிருக்கலாம்ல?" என்றாள். ○

**ஸ்ரீ சாரதா தேவியாரின் 150ஆவது ஆண்டு விழா:**
**(12 நவம்பர் - 16 டிசம்பர் 2003)**

# அன்னையின்

அன்னை சாரதா தேவியின் குடிலைப் பெருக்கிச் சுத்தம் செய்த பணிப்பெண், துடைப்பத்தை அலட்சியமாக ஒரு மூலையில் வீசி எறிந்தாளாம். அதைக் கண்ட அன்னைக்குக் கோபம் வந்துவிட்டதாம்.

"அது என்ன, அப்படி ஓர் அலட்சியத்துடன் துடைப்பத்தை வீசி எறிகிறாய்? அதிலும் இறைவன் இருக்கிறான் என்பதை நீ உணரவில்லையா?'' என்று அந்தப் பணிப்பெண்ணைக் கடிந்து கொண்டாராம் அன்னை.



அவர் எதிலும் வேறுபாடு காணவில்லை. அத்தனை உயர்வான மனநிலை அவருக்கு. உயர்சாதி - தாழ்ந்த சாதி, ஏழை - பணக்காரன், படித்தவன் - பாமரன், மத - இன வேறுபாடு இவை இன்றி, அனைவரும் ஆண்டவனின் குழந்தைகள்; ஜடப் பொருள்களிலும் இறைவன் இருக்கிறான். அவனிடம் பக்தியோடு, பிறருக்குச் சேவை செய்து, ஒற்றுமையாக இருந்து, உள்ளத் தெளிவோடு ஆன்மிக ஆனந்தத்தில் திளைக்க வேண்டும் என்று அன்னை உபதேசித்தார்.

ஸ்ரீ சாரதா தேவி 1853, டிசம்பர் 2ம் தேதி அவதரித்தார்.

அன்னையின் 150ஆவது ஆண்டு விழாவை ஸ்ரீராமகிருஷ்ண மடம், நவம்பர் 12 முதல் டிசம்பர் 16வரை மிகச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடுகள் செய்திருக்கிறது.

சுவாமி விமூர்த்தானந்தர் விழா நிகழ்ச்சிகள் பற்றிய விவரங்கள் சொல்கிறார்.

● ***கிட்டத்தட்ட ஒரு மாத நிகழ்ச்சிகளை எப்படி நடத்த இருக்கிறீர்கள்?***

அன்னையின் திருஉருவம் தாங்கிய ரதம் ஒன்று தமிழ்நாடு மற்றும் புதுவையில் ஐம்பத்து மூன்று இடங்களுக்குச் செல்லவிருக்கிறது. கிராம மக்களும் இவ் விழாவில் கலந்து கொள்ளும் பொருட்டு, நூற்றிப் பதிமூன்று இடங்களில் சாலையோர விழாக்கள் நடைபெறும்.

ரதம் செல்லும் ஐம்பத்து மூன்று ஊர்களை ஏழு தொகுதிகளாகப் பிரித்து, அங்கெல்லாம் விழாக்கள் நடைபெற, சுவாமி கவுதமானந்தர் நேரில் சென்று ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்.

● ***சென்னையில் எப்படிக் கொண்டாடப் போகிறீர்கள்?***

சென்னையில் இருபத்தியிரண்டு இடங்களில், ஆகஸ்ட் மாத இறுதியில் இருந்தே விழாக்கள் நடைபெறத் துவங்கி விட்டன. இவற்றில் மக்கள் திரளாகக் கலந்து கொண்டு வருகிறார்கள்.

சென்னையின் ஒன்பது குடிசைப் பகுதி



• ஸ்ரீ சாரதா தேவி வழிபாடு...

சென்னையிலிருந்து புறப்படும்போதும், டிசம்பர் 9 அன்று சென்னைக்குத் திரும்பும் நாளிலும் என்னென்ன நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?

நவம்பர் 12 அன்று காலையில் சிறப்பு பூஜை, பொதுக்கூட்டம், சுவாமி கவுதமானந்தரின் சொற்பொழிவு எல்லாம் முடிந்தவுடன், காவல் துறைத் தலைவர் ஐ.கே. கோவிந்த் ரத யாத்திரையைத் துவக்கி வைப்பார்.

ரதம் சென்னை திரும்புகிற அன்று வரவேற்பு நிகழ்ச்சிகள் நடைபெறும். தொடர்ந்து டிசம்பர் 12, 13, 14, 15, 16 தேதிகளில் கலை நிகழ்ச்சிகள் தினமும் நடைபெறுகின்றன. கவிஞர் சுப்பு ஆறுமுகம் வில்லுப்பாட்டு, டாக்டர் சாரதா நம்பி ஆரூரன் சொற்பொழிவு, ஓ.எஸ். அருண் இன்னிசை, சாரதா வித்யாலயா மாணவிகளின் 'அன்னை' நாட்டிய நாடகம், நித்யஸ்ரீ மகாதேவன் இன்னிசை, இளம்பிறை மணிமாறன், சுவாமி கவுதமானந்தர், கிருஷ்ணராஜ் வாணவராயர், மஞ்சுளா ரமேஷ், நீதிபதி பிரபா ஸ்ரீதேவன் சொற்பொழிவுகள், வாணி ஜெயராம், எஸ். ஜானகி சிறப்பு இசை நிகழ்ச்சிகள் எனப் பல நிகழ்ச்சிகள் நடைபெறவுள்ளன.

எல்லா நிகழ்ச்சிகளிலும் பொதுமக்கள் பெருமளவில் கலந்து கொண்டு பயன் பெற வேண்டும் என்பதுதான் எங்கள் குறிக்கோள்.

- சாருகேசி



# நினைவாக...

களுக்கும், இருபத்தைந்து புறநகர்ப் பகுதிகளுக்கும் ரதம் செல்லவிருக்கிறது; விழாக்கள் நடைபெற உள்ளன. கோலப் போட்டி, கட்டுரைப் போட்டி, ஓவியப் போட்டி, பஜனை, திருவிளக்குப் பூஜை, சொற்பொழிவுகள், நாடகம், அன்னதானம் ஆகியவற்றுக்கு ஏற்பாடுகள் செய்திருக்கிறோம். பெண்களை மிகுதியாக ஈடுபடுத்தும் நிகழ்ச்சிகள் இவை. இவை தவிர, நிரந்தரப் பணிகள் திட்டமும் இருக்கிறது.

● *நிரந்தரப் பணிகள் என்றால்?*

சுய வேலை வாய்ப்பு, குடிநீர் வசதி, புறநகர் மருத்துவ வசதி, புறநகர்க் கல்வி வசதி, புத்தக விற்பனை நிலையம், சிறுவர் அமைப்புக்கள், பிடி அரிசித் திட்டம், மரக் கன்றுகள் நடுதல், அன்னை அனாதை இல்லம், மகளிர் கல்லூரி என நிரந்தரப் பயன்தரும் பணிகள் மேற்கொள்ளப்படும்.

சிறப்பு வெளியீடுகளாக பல நூல்களைப் பதிப்பித்துள்ளோம்; ஆடியோ காசெட்கள், சி.டிக்கள் மூலம் அன்னையின் வாழ்வும் சிந்தனைகளும் பரப்பப்படும். ராமகிருஷ்ண விஜயம் சிறப்பு மலர் வெளியிடுகிறது.

● *நவம்பர் 12 அன்று ரதம்*

## பா.ராகவன்

# மெல்லினம்

அந்தப் படிகள் ஓரடி அகலம் கூட இல்லை. இரண்டு கால்களையும் ஒரே சமயத்தில் ஒரே படியில் வைத்தால் இடித்துக் கொள்ளும் போலிருந்தது. ஆனால் எத்தனை நுணுக்கமாக, வளைத்து வளைத்து உயரே உயரே கட்டிக் கொண்டே போயிருக்கிறார்கள்! பாதுகாப்புக்குப் பக்கவாட்டில் மரத்தாலான கைப்பிடி இருந்தாலும், அந்தக் குறுகலான பொந்தின் வழியே இரண்டாவது, மூன்றாவது, நாலாவது மாடிகளை ஏறிக் கடக்கும்போது ஜக்குவுக்கு பயமாகத்தான் இருந்தது.

படிகள் தான் குறுகலே தவிர, ஒவ்வொரு தளமும் ஹாவென்று விசாலமாகவும் வெளிச்சம் கொட்டிக் கொண்டு போகிறபடியாகவும் இருந்தது. எத்தனை ஜன்னல்கள்! சிமெண்டுத் தரையே மொசைக் தரை மாதிரி வழுவழுவென்றிருந்தது. உத்தரங்களில் எழுதப்பட்டிருந்த ஓவியங்கள் பல சிதிலமடைந்திருந்தாலும், ஒரு பார்வையில் நர்த்தன மண்டபமும் ராஜசபையும் இன்ன பிறவும் தென்படாமல் போவதில்லை. இது ராஜா ஓய்வெடுக்கிற இடம். இங்கே மந்திராலோசனைகள் நடக்கும். இங்கே ராணிகள் கொலுவிருப்பார்கள். அங்கே ஒரு காலத்தில் நீச்சல் குளம் இருந்தது. அதோ, அந்த மண்டபம்தான் கைதிகளை விசாரிக்கிற இடம், என்று ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டே வந்தார் வழிகாட்டி.

"ஒரு ஊரைத் தலை நகரமா ஆக்கறதுன்னு முடிவு செஞ்சதும், மன்னர்கள் முதல்ல கோயிலைத்தான் கட்டுவாங்க. கோயிலை விட ஒரு போதும் தன் மாளிகை உயரமா அமைஞ்சுடக் கூடாதுங்கறதுல கவனமா இருப்பாங்க. ஆனா இந்த ஊர்க் கோயிலைக் கட்டின ராஜாவேற. இந்த அரண்மனையைக் கட்டின ராஜா வேற"

ஆனால் ஜக்குவுக்கு தஞ்சையின் அந்தக் கோயிலைக் காட்டிலும், மாளிகை பெரிதாகத்தான் இருக்கும் என்று ஏனோ தோன்றிக் கொண்டே இருந்தது. எத்தனை உயரம்! எத்தனை தளங்கள்! ஒவ்வொரு தளத்தின் ஜன்னல் வழியாகவும் வெளியே பார்க்கும்போது பயமும் பரவசமும் கூடிக் கொண்டே போகிறது. உப்பரிகையில் நின்று ஊரைப்பார்க்க வேண்டும் என்கிற ஆவல் கட்டுக்கடங்காமலாகியிருந்தது.

"பாக்கலாமே. இங்கேருந்து திருச்சி டால்மியாபுரம் டவர் தெரியும்!" என்றார் வழிகாட்டி.

பெரும்பாலான பையன்கள் அந்த மாளிகையின் இரண்டாம் தளத்திலேயே நின்றுவிட்டிருந்தார்கள். தொல்பொருள் ஆய்வுத் துறையின் பராமரிப்பில், அங்கே ஒரு பெரிய திமிங்கலத்தின் எலும்புக் கூடு இருக்கிறது. அப்பா, எத்தனை பெரிசு! ஒரு கப்பல் மாதிரி! பிரமிப்பில் பலரால் அங்கிருந்து நகரவே முடியவில்லை. கம்பிச் சட்டத்துக்கு அந்தப் பக்கம் இருந்த திமிங்கலத்தைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஜக்குவுக்குத் திமிங்கலம் பிடிக்கவில்லை. திமிங்கலத்தின் எலும்புக் கூட்டில் என்ன இருக்கிறது? ரத்தமும் சதையுமான திமிங்கிலத்தைத் தண்ணீரின் நடுவே பார்க்க முடிந்தால், ஒரு வேளை பரவசம் வரலாம். ஆனால் பார்க்கவும் அறியவும் கிடைக்கிற எல்லாமே, எலும்புக் கூடுகள் மாதிரிதான் இருக்கின்றன. டைரியில் உருப்பெற்ற நிர்மலா மாதிரி.

அப்பாவிடம் கேட்பதன் மூலம் அல்ல, என்றைக்காவது ஒரு நாள் அவளை நேரில் பார்த்தால்தான், தன் கொதிப்புகள் அடங்குவதற்கு ஒரு வழி பிறக்குமோ என்று அவனுக்குத் தோன்றியது. ஒரு தரம் பார்த்துவிட்டால் போதும். முகத்திலேயே தெரிந்துவிடும். இவளை அப்பா காதலித்திருப்பாரா? ஆமாம், அல்லது இல்லை. இரண்டில் ஒரு பதில் அப்போது தோன்றிவிடும். அப்புறம் விசாரணைகள் தேவையிருக்காது. ஒரு முகம் சொல்லாததையா, சொற்கள் சொல்லிவிடும்?

அப்படிப் பார்க்க நேர்ந்துவிட்டால் இன்னொன்றும் தெரிந்துவிடும். ஒரு வேளை அப்பா அவளைக் காதலித்திருந்தாலும், இத்தனை வருஷங்களுக்குப் பிறகு அந்தத் தொடர்புக்கு உயிர் உண்டா, இல்லையா என்பதே அது. அப்பா பார்க்க வேண்டியதுகூட இல்லை. தான் பார்த்தாலே போதும். அவள் முகத்திலேயே தெரியும். அப்பாவுக்கும்

அவனுக்கும் இத்தனை காலம் கழித்து ஏதாவது தகவல் தொடர்பாவது நேருமா, சாத்தியமில்லையா என்பது.

தனக்கு ஏன் இப்படியெல்லாம் தோன்றுகிறது என்று அவனுக்கே புரியவில்லை. ஆனால் இந்த ஒரு விஷயத்தைத் தவிர, வேறெதுவுமே தன்னால் சிந்திக்க முடியாதபடி இருப்பதுதான் பெருங்கவலையாக இருந்தது. இன்பச் சுற்றுலா தன்னளவில் இன்பம் தருமா என்பது அவனுக்குச் சந்தேகமாகவே இருந்தது.

# 21



"என்ன ஜக்கு, எப்படி இருக்கு டூர்?"

சந்திரா டீச்சர் தான். சோழர் வம்சம், மராட்டிய வம்சம் கதைகளெல்லாம் சொல்லிவிட்டுச் சோர்வாக ஏறி வந்திருந்தார். இன்னும் ஒரு மாடி ஏறிவிட்டால் போதும், உப்பரிகைதான். வானம் நிச்சயம் வெகு பக்கத்தில்தான் அங்கே இருக்க வேண்டும்.

"நல்லா இருக்கு மிஸ்" என்றான் ஜக்கு.

"நல்லா கவனிச்சு எல்லாத்தையும் மைண்டுல ஏத்திக்கோ. எப்படியெல்லாம் அந்தக் காலத்துல பில்டிங்ஸ் டிசைன் பண்ணியிருக்காங்க பார்த்தியா?"

"ஆமாம் மிஸ். பயங்கர பெரிசா இருக்கு. எவ்ளோ உயரம்!"

"குட். பில்டிங்கை அப்சர்வ் பண்ணும்போது, கூடவே அந்த பீரியடையும் நினைச்சுப் பார்த்துக்கணும். அல்லது சொல்றதைக் கேட்டு ஞாபகத்துல வெச்சுண்டே வரணும். இந்த மாதிரி இடங்களுக்கு வரும்போது அது ரொம்ப முக்கியம். நான் சொன்ன சோழாஸ் ஹிஸ்டரில ஏதாவது சந்தேகம் உண்டா உனக்கு?"

அவன் யோசித்தான். ஒரே ஒரு சந்தேகம் இருந்தது அவ

னுக்கு. "இத்தனை பிரும்மாண்டமான தலைநகரமும் மாடமாளிகைகளும் இங்கே ஏற்கெனவே இருக்க, எதற்காக கொஞ்சம் பக்கத்தில் தள்ளிப்போய் இன்னொரு தலைநகரை ராஜேந்திரசோழர் உருவாக்க வேண்டும்?"

சந்திரா டீச்சர் அவன் தலையைக் கலைத்துவிட்டுச் சிரித்தார். "நல்ல கேள்வி தான் ஜக்கு. ஆனா கரெக்ட் ஆன்ஸர் இதுக்கு ஹிஸ்டரில கிடையாது. நிறைய கண்ட்ரீஸை ஜெயிச்சுட்டு வந்த சந்தோஷத்துல, இன்னொரு ஊரை தலைநகரமா உருவாக்கணும்னு தோணியிருக்கலாம். இப்போ நாமெல்லாம் ஒரு வீடு கட்டினா, நம்ம பேரை வாசல்ல பதிச்சு வெச்சுக்கணும்னு நினைக்கறதில்லையா? அது மாதிரி, அவ்ளோ விக்டரீஸ் பார்த்த ராஜாவுக்குத் தன் பேர் சொல்ல ஒரு தனி நகரம் வேணும்னு தோணியிருக்கலாம்..."

"சரி மிஸ்" என்று சொல்லிவிட்டானே தவிர, அவனுக்கு கங்கைகொண்ட சோழபுரத்தை ஒரு தலைநகரமாக ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை. எத்தனை சின்ன ஊர்! மேலும் இந்தக் கோயில் மாதிரியேதான் அந்தக் கோயிலும் இருக்கிறது. எதற்காக ஒரே மாதிரி இன்னொரு அடையாளத்தை உருவாக்கும் ஆசை?

சம்பந்தமில்லை என்று அடிக்கடி தோன்றினாலும், தஞ்சையில் அவன் பார்த்த கோயிலையும், மாளிகை மேட்டு சோழன் கோயிலையும், தன் அம்மாவும் அந்த நிர்மலாவுமாக மாற்றி மாற்றி நினைத்துக் கொண்டே இருந்தான். இதென்ன சம்பந்தமில்லாத யோசனை என்று அவனுக்கே வெறுப்பாகவும் இருந்தது. அதே சமயம் தஞ்சைப் பெரிய கோயிலைத் தன் அம்மாவாகத் தன்னால் எப்படி உருவகப்படுத்திக் கொள்ள முடிகிறது என்றும் ஆச்சர்யமாக இருந்தது. அந்த பிரும்மாண்டம். அகன்டு விரிந்து கரம் நீட்டி அணைக்கக் காத்திருப்பது போன்ற பெரிய கதவுகள். அடுக்கடுக்கான சுற்றுச் சுவரின் பின்னால் விரிகிற பரந்த தளம்... அம்மாவின் மனசு மாதிரி. அப்புறம் உயர்ந்த கோயில். மிக உயர்ந்த லிங்கம். குளிர்ச்சியும் மலர்ச்சியுமான சந்நிதி, அம்மாவின் மடி மாதிரியே தான் இருக்கிறதாக அவன் உணர்ந்தான். சுற்றுலா புறப்பட்ட நிமிஷத்திலிருந்தே அம்மா ஞாபகமாகவே அவனுக்கு இருந்தது. விட்டுவரும்போதுதான் அண்மை மிகவும் வேண்டியிருக்கிறது. என்ன செய்வது? இதுவும் ஓர் அனுபவம்.

உப்பரிகைக்கு வந்துவிட்டிருந்தான். எதிர்பார்ப்பு வீணாகவேயில்லை. எத்தனை பிரும்மாண்டம்! பரந்தவெளி! உலகம் சிறுசிறு நாய்க் குடைகளால் செய்யப்பட்டதுபோல் குட்டியாக, கொத்துக் கொத்தாகத் தென்பட்டது. கண்ணுக்கு எட்டும் தூரமெல்லாம் பச்சைப் பசேலென்று இருந்தது.

"தஞ்சாவூரே பசுமையான பூமிதான்" என்றார் தொல்பொருள் துறை வழிகாட்டி. "இப்ப மழை இல்லை. காவிரில தண்ணி இல்லை. அதனால பச்சை கொஞ்சம் கம்மி".

இன்பச் சுற்றுலாவின் இரண்டாம் நாள் அது. எத்தனை முயற்சி செய்தாலும் தன் மனம் வேறெதிலும் ஈடுபட மறுப்பதை ஜக்கு மிகவும் உணர்ந்திருந்தான். கிட்டத்தட்ட ஒரு பைத்தியம் மாதிரி ஆகிவிட்டோமோ என்று அவனுக்கே அச்சமாக இருந்தது. எதைப் பார்த்தாலும் அதே ஞாபகம். எதைக் கேட்டாலும் அதே நினைவு. எதிலும் அதே

---

"மெனக்கெட்டு பஸ்ஸை நிறுத்தி ஏறிய அந்த அரசியல்வாதி, ஏன் உடனே இறங்கிட்டார்?"

"'ரூட் மாறியிருக்கு. பஸ் இன்னிலேர்ந்து நேர்வழில போகுது'ன்னு கண்டக்டர் சொன்னதும் இறங்கிப் போயிட்டார்!"

- சீர்காழி வி. ரேவதி

---

சிந்தனை. தன்னால் ஒரு போதும் யாரிடமும் வாய்விட்டுக் கேட்கவோ, சொல்லவோ முடியாது என்றும் அவனுக்கு உறுதியாகத் தோன்றியது. எனில் இதற்கு ஒரு முடிவுதான் என்ன?

நிறையக் குரங்குகள் இருந்தன அங்கே. மாடத்துக்கு ஒன்றாக. கூரைக்குச் சிலவாக. ஊரின் ஜனத்தொகைக்குச் சமமாகக் குரங்குகள் இருக்கும் போலிருந்தது. ஆகவே விக்கிக்கு அந்த இடத்தில் தயக்கமின்றி உலவவும், குதிக்கவும், ஆடவும், புழங்கவும் பிரச்னையே இல்லாமல் போய்விட்டது. "அப்பாடி. மகாபலிபுரம் மாதிரியே இருக்கு இந்த ஊரும். ரொம்ப தேங்ஸ் ஜக்கு. இப்போதுதான் எனக்கும் ஜாலியா இருக்கு" என்றது அது.

"நீ நாசமாப்போ. நான் எவ்ளோ குழப்பத்துல கஷ்டப்பட்டுண்டிருக்கேன். உனக்கு ஜாலி ஒரு கேடா?"

"என்ன குழப்பம்? சிம்பிள் வழி. கூட்டத்துக்கு நடுவில உன்னால உருப்படியா எதுவும்

யோசிக்க முடியாது. டீச்சர், பசங்க, வாத்தியார்கள், இந்த டூரிஸ்ட் கைடுத் தாத்தா வேற. கிட்ட எப்படி நிக்கற? பீடி நாத்தம் எனக்கே சகிக்கலை. விட்டுட்டுத் தனியா எங்கியாவது போய் உக்காந்து யோசி. ஒரு முடிவோடதான் நீ ஊர் திரும்பறே"

அவனுக்கும் அது சரியாகத்தான் பட்டது. ஆனால் எப்படி தனியாகப் போய் உட்கார்ந்து யோசிப்பது? சரஸ்வதி மஹால் நூலகத்தில் அதற்கான சந்தர்ப்பம் கிடைக்கும் என்று அவன் நினைத்தான். ஆனால் பராமரிப்புப் பணிகள் நடந்து கொண்டிருந்ததால், நூலகத்துக்குள்ளே போக அனுமதியில்லை என்று சொல்லிவிட்டார்கள்.

சிவாஜி மன்னரின் வம்சத்தில் வந்த மராட்டிய மகாராஜா. அவரது சயன அறைக்குள் அவன் நுழைந்து சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தபோது, பக்கத்தில் ஒரு சிறு சந்து மாதிரி ஒரு இடம் தென்பட்டது. நிம்மதியாக உட்கார்ந்து கொஞ்ச நேரம் யோசிக்கலாம் என்று தோன்றியது. ஆனால் அவன்



அங்கே போனபோது, டேவிட் மாஸ்டரும் வந்துவிட்டார். கையில் சிகரெட்!

"இங்கே என்னடா பண்றே? போ, போய் எல்லாரோடயும் சுத்திப்பார். தனியா போகக் கூடாது எங்கேயும்!"

வேறு வழியில்லாமல் மனசேயின்றித் திரும்பிவிட்டான்.

"ஒண்ணு பண்ணு. இவங்க இங்கேருந்து கிளம்ப எப்படியும் இன்னும் ரெண்டு மணி நேரமாவது ஆகும். நீ பார்த்ததுபோதும். அந்த இன்னொரு வழியா கீழ இறங்கிப் போயிடு. கோட்டைக்கு வெளிவாசல் பின்பக்கம் வரும்போது, ஒரு தூங்குமூஞ்சி மரம் பார்த்தியே, அங்கே போய் உக்காந்து யோசி. எப்படியும் அந்த வழியாத்தான் எல்லாரும் பஸ் ஏற வருவாங்க. அப்ப சேர்ந்துக்கலாம்" என்றது விக்கி.

அவனுக்கு யோசிக்கக் கூடத் தோன்றவில்லை. சடசடவென்று படிகளின் இரு புறமும் பிடித்துக் கொண்டு இறங்க ஆரம்பித்துவிட்டான். எதிர்ப்புறப் படிகளில் சக மாணவர்கள் ஏறிவருவதைப் பார்த்தான். விக்கி சொன்னது சரிதான். இவர்கள் எல்லாரும் முழுக்கச் சுற்றிவிட்டு இறங்க, எப்படியும் நேரம் பிடிக்கும். அதற்குள் தனக்குத் தேவையான தனிமையைத் தானே உண்டாக்கிக் கொள்வதுதான் சரி.

ஐந்து நிமிஷத்தில் அவன் கீழ்த்தளத்தை அடைந்துவிட்டான். அவன் பள்ளி மாணவர்கள், ஆசிரியர்கள், யாரும் அங்கே இல்லை. எல்லாருமே மேலே தான் போயிருந்தார்கள்.

விறுவிறுவென்று வெளியேறி, கோட்டைச் சுவரை நெருங்கினான். கொஞ்சம் பயமாகவும் இருந்தது. டீச்சருக்குத் தெரிந்தால் நிச்சயம் சத்தம் போடுவார்கள். ஆனால் இறங்கிவிட்ட பிறகு யோசிப்பதும் வீண் தானே?

அவன் கோட்டையைவிட்டு வெளியேறி அந்த மரத்தடிக்கு வந்தான். நிறையக் கற்கள் உடைத்துப் போடப்பட்டிருந்தன. அப்பாடா என்று ஒரு பெரிய கல்லின்மீது உட்கார்ந்தான். தள்ளுவண்டிகளில் குளிர்பானங்கள். புத்தகங்கள். கேமராவுடன் வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள், சிவந்த கட்டடத்தின் வாயிலில் பச்சைப் புல் அலங்கரிப்பு.

பார்வை சுற்றுப் புறங்களின்மீது தாவித் தாவிப் படிந்து நகர்ந்து கொண்டிருந்த வேகத்திலேயே, அவன் மனமும் தாவிக் கொண்டிருந்தது. ஏதாவது ஒரு முடிவுக்கு வந்தே ஆக வேண்டும் என்கிற பதற்றம் மிகுந்த போதுதான், அந்த எண்ணம் தோன்றியது.

கொஞ்ச நாள் யார் கண்ணிலும் படாமல் எங்காவது போய்விட்டால்தான் என்ன? எப்படியும் கண்டுபிடித்துவிடுவார்கள். ஓடிப் போனதன் காரணத்தை அப்போது கேட்பார்கள். தானே சொல்கிறோமோ, தானாகத் தெரியவருமோ? எப்படியோ, விஷயம் வெளியே வரும். விளைவும் தெரியும். இத்தனை நாளாகப் பட்டுக் கொண்டிருக்கும் மண்டைக்குடைச்சலுக்கும் ஒரு விடிவு அகப்படாமலா போகும்?

விளைவே கூட வேண்டாம். இந்தக்ஷணம் உலகில் தான் தனி என்று ஆகிவிட்டாலே மனம் இலேசாகிவிடும் போலிருந்தது. குறைந்த பட்சம் பிரச்னையையாவது புதிதாக, வேறொன்றாக எடுத்துப் போட்டுக் கொண்ட மாதிரி.

ஒரு தீர்மானத்துடன் அவன் எழுந்தான்.

(தொடரும்)

# கண்ணைக் கவரும் கொண்டை!



கும்பகோணம் அருகேயுள்ளது திருப்புள்ளம் பூதங்குடி. நான்கு திருக்கரங்களுடனும், சங்கு சக்கரத்துடனும் ஸ்ரீராமன் பாலசயனக் கோலத்தில் காட்சி தரும் ஒரே தலம். மோட்சம் தருவதற்காக ஜடாயுவின் பூதவுடலுக்கு இறுதிக் கடன்களை ஸ்ரீராமரே முன்னின்று செய்ததால், இந்தத் தலம் திருப்புள்ளம் பூதங்குடி எனப்படுகிறது.

பெரிய திருமொழியில் ஐந்தாம் பத்தில் முதல் பத்தாக இடம் பெற்றுள்ளது திருப்புள்ளம் பூதங்குடி குறித்தான பாடல்கள். அந்தப் பாசுரங்களை மனமுருகிப் படிப்பவர்களுக்கு மனக்கவலை பறந்து போகும், விரும்பியவை கிட்டும், வினைகள் தீரும், மோட்சம் கிடைக்கும்.

சமீபத்தில் ஸ்ரீ வல்வில் ராமருக்கு எழிலார்ந்த திருமங்கை மன்னன் கொண்டை சூட்டப்பட்டது.

வெள்ளியால் செய்யப்பட்டுத் தங்க முலாம் பூசப்பட்ட இந்தக் கொண்டையில் 2100 ஜெர்க்கான் கற்கள் பதிக்கப்பட்டுள்ளன. ஜாதிப் பச்சைக் கற்களும், சிவப்பு மற்றும் வெள்ளைக் கற்களுமாக கண்ணைக் கவர்கின்றது. ஸ்ரீ அகோபில மடத்தின் 45வது பட்ட ஸ்ரீ நாராயண யதீந்திர மகாதேசிகன் சுவாமிகளின் நியமனத்தின் பேரில், திருப்புள்ளம் பூதங்குடி ஸ்ரீ வல்வில் ராமருக்கு திருமங்கைமன்னன் கொண்டை சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.



- இருள்நீக்கியான்

# திருமலை

**வா**கனங்களை ரிப்பேர் பார்க்கும் மெக்கானிக் ஹீரோவுக்குப் புத்தாண்டு அன்று, 'நல்லாயிருப்போம் நல்லாயிருப் போம்' என்று வாழ்த்துச் சொல்கிறார் நாயகி. மெக்கானிக்கின் மனசு ரிப்பேராகிறது. பல்வேறு மோதல்களுக்குப் பின் இருவரும் இணைகிறார்கள்.

அதாவது புராதன ஏழை- பணக்கார காதல்தான் கதை. ஆனால் புதுப்புது சம்ப வங்களோடு கதையை நகர்த்தியிருக்கும் விதத்தில் அறிமுக இயக்குனர் ரமணா "நல்லா சீன் வெச்சிருக்கான்பா!" என்று தியேட்டரிலேயே பாராட்டுப் பெறுகிறார்.

மணக்கோலத்திலிருக்கும் காதலியை நண்பன் ஆட்டோவில் கூட்டிவந்துவிட, எல்லா ஹீரோக்களையும் மாதிரி, 'நானாச் சுடா' என்று மார்தட்டவில்லை ரமணா விஜய். மாறாக, சம்பந்தப்பட்டவர்களிடமே நண் பனை நேரிடையாக அழைத்து வந்து, விஜய் பேசும் வசனமும், காட்சியும் யதார்த்தத்தின் இன்னொரு பக்கத்தை யோசிக்கும், நேசிக்கும், ரமணா மீதான நம்பிக்கையைக் கூட்டுகிறது.

தியானக் கூடத்துக்குள் வந்து ஜோதி காவிடம் காதல் சொல்லும் போதும், எல்லோர் முன்பும் ஜோதிகா, விஜயின் காதல் கடிதத்தை வாசிக்க, (அடப்பாவிகளா, இவ்ளோ கெட்ட வார்த்தைகளைச் சேர்க்க யாரப்பா தைரியம் கொடுத்தது?) அப்பாவியாக விஜய் காட்டும் நடிப்பு இயல்பு. பீட்டர் ஹெயினின் ஆக்ஷன் காட்சிகளில் இதயம் படபடக் கிறது.

எல்லாத் தவறுகளையும் பண்ணும் வில்லன் மனோஜ் கே.ஜெயின் யார் என்பது புரியாத புதிர். அடிக்கடி "என் சாம்ராஜ் யமே" என்று ஆரம்பித்து வசனம் பேசு கிறார், கட்டிக் கொண்டிருக்கும் ஒரு கட் டடத்தின் உச்சியில் நின்று கொண்டு! கிளைமாக்ஸில் விஜய் பேசும் டயலாக்கில் மனம் திருந்தி ஆயுதங்களைக் கைவிடுவ தாக அவர் சொல்வதும், அடுத்த நொடியே அவரைக் காலி பண்ண அவரு டன் இருக்கும் நிழல்கள் ரவி முயல்வதும் நம்பும்படியாகவா இருக்கிறது?

இடைச் செருகல்களாக ரகுவரனும் கௌசல்யாவும். கதைக்குச் சம்பந்த மின்றி பிட் பிட்டாக வந்து காமெடி பண்ணுவதாக நினைக்கும் விவேக் 'கிரிப்'பை இழந்த ஸ்பேனர் மாதிரி எரிச்சலூட்டுகிறார். கலை இயக்குனர் கதிரின் புதுப்பேட்டை செட்டும் ரத்ன வேலுவின் பரபரக்கிற கேமராவும் படத்துக்குப் பலம். சிறுசிறு ரிப்பேர்கள் இருந்தாலும் ரேஸில் முந்துகிறான் திருமலை!

— மொக்கராசு



# வாக்காளர் கூறும் கதைகள்!

**திருவாளர் பொதுஜனத்துக்கு மேடை அளித்து பேச விட்டால் என்னென்ன கதைகள் சொல்வார்? உதாரணத்துக்கு இதோ இரண்டு குட்டி கதைகள் :**

### அங்கே அனுமதி கிடையாது!

ஒரு சர்வாதிகார நாட்டிலிருந்து ஒருவர் தமது பல்லைப் பிடுங்கிக் கொள்ள பக்கத்து நாட்டுக்கு வந்தார். மிகவும் சிரமப்பட்டு தம்மிடம் வந்தவரைப் பார்த்த பல் மருத்துவர் வியப்போடு கேட்டார்.

"உங்கள் நாட்டில் நல்ல பல் மருத்துவர்கள் யாரும் கிடையாதா?"

"நிறையப் பேர் இருக்கிறார்கள்" என்றார் வந்தவர்.

"பின் அங்கேயே பல்லைப் பிடுங்கிக் கொள்ளாமல் இங்கு ஏன் வந்தீர்கள்?" என்று கேட்டார் பல் மருத்துவர்.

"அங்கே எங்களுக்கு வாயைத் திறக்க அனுமதி கிடையாதே!" என பதில் வந்தது.



### எதில் ஆர்வம் அதிகம்?

ஏதென்ஸ் நாட்டின் அரசியல் மேதையான டெமஸ்தனிஸ் நாட்டை எப்படிச் சீர்படுத்துவது என்பது பற்றி உரையாற்றிக் கொண்டிருந்தார். கூட்டத்தில் யாருமே கவனிக்காததை உணர்ந்த அவர், "உதாரணத்துக்கு உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள். ஒருவன் ஒரு கழுதையை விற்றான். விற்ற பின் வெயில் தாளாமல், தான் விற்ற கழுதையின் நிழலில் சிறிது நேரம் உட்கார்ந்தான். உடனே வாங்கியவன் சண்டைக்கு வந்தான். விற்றவனோ, "கழுதையை தான் உனக்கு விற்றேன். நிழலை உனக்கு விற்கவில்லை" என்றான். வாங்கியவன் கழுதையைத்தான் வாங்கியதால் அதன் நிழலும் தனக்கே சொந்தம் என்றான். இப்படியாகச் சண்டை போட்டார்கள். இதன் முடிவு என்ன என்று சொல்லவா?" என்றார்.

உடனே எல்லோரும் கோரஸாக "சொல்லுங்கள், சொல்லுங்கள்" என்றார்கள்.

உடனே அவர், "ஒன்றுக்கும் உதவாத கதைகளை அறிய ஆவலாயிருக்கிறீர்கள். நாட்டைச் செம்மைப்படுத்தும் வழிகளைப் பற்றி நீங்கள் கவலைப்படவில்லையே" என்றார்.

**- கே. சுதர்ஷன்**

பிதுருக்களின ஆசி பெற திதி நாளில் கோபூஜை செய்ய அழைக்கிறோம் !




- வயது முதிர்ந்த, பால் வற்றிய, நோயுற்ற பசுக்களைப் பாதுகாக்க, உங்கள் அன்பு காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர் ! பசுவைப் பாதுகாத்து பராமரிக்க பசுமடத்திற்கு கோதானம் செய்து புண்ணியம் பெறுவீர்.
- நமது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால் பசுவிற்கு கொடுத்தால் போதும் அது நம் முன்னோர்களுக்கு சென்று அடையும்.
- ஆபிசார தோஷம் நீங்கி, முன்னோர்களின் அருளாசி பெற பசுக்களை போற்றி பரந்தாமனின் அருளைப்பெறுவோம்!
- முப்பத்து முக்கோடி தேவர்களும், அனைத்து புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ள பசுவிற்கு பூஜை செய்வதால் இறைவன் நமக்கு வேண்டிய வரங்களைத் தருவார்
- அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பிறந்த நாள், பண்டிகை நாட்கள் முன்னோர்கள் திதி நாட்கள் என தங்களுக்கு உகந்த நாட்களின் போது கோதானம் செய்து, பசுக்களின் பராமரிப்பிற்கு நன்கொடை அளித்து ஸமஸ்த தேவதா ஸ்வரூபியான ஸ்ரீகோமாதாவின் பூஜையால் சகல ஐஸ்வர்யங்களையும் பெறலாம்.



பசுமடத்தில் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள்...

**பசு மடத்தில் உள்ள பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க**

| | |
|---|---|
| ஒரு நாளுக்கு............ரூ : | 15.00 |
| ஒரு வாரத்திற்கு........ரூ : | 105.00 |
| ஒரு மாதத்திற்கு........ரூ : | 465.00 |
| ஒரு வருடத்திற்கு.....ரூ : | 5400.00 |

**தேவைப்படுகிறது**

தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5400- அனுப்பும் அன்பர்களுக்கு, வருடத்திற்கு ஒரு முறை ஆறு ஆண்டுகளுக்கு யாருக்கு திதி செய்ய விரும்புகிறீர்களோ, அவர்களுக்கு திதி நாளில் கோபூஜை செய்யப்பட்டு பசுவும் கன்றும் சேர்ந்த விக்ரகமும், ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

பசுவை பாதுகாக்கும் திருப்பணியில் பங்குகொள்ளும் அன்பர்கள் விரும்பும் நாட்களில் கோபூஜை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். அன்றாடம் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள் கலந்து கொள்ளலாம்.



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque / D.D / M.O. மூலமாக Shri Ghosala Seva Trust என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# பசு மடம்

**பசுக்கள் பாதுகாப்பு இல்லம்**

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077.

TEL : 2495 9302. Fax : 044-5206 6525. E-mail:siva siva @ vsnl.net



பசுக்கொட்டிலைப் போன்ற பரிசுத்தமான ஸ்தலம் எதுவும் இல்லை !

# ஸ்ரீ ராமும் ஸ்ரீஜடிபாபாவும்

**தேவநாதன்**

''ஜானகி, என் பக்தர்கள் கூட்டத்தைப் பார்த்தாயா?'' என்றான் ஸ்ரீராமன். சீதை அழகாக ஒரு நொடிப்பு நொடித்தாள்.

''க்கும். எல்லாம் மாநாட்டுக்கு வந்த கூட்டம். காலம்பற காணாமப் போயிடும்.''

பெரிய வில்லைத் தரையில் ஊன்றி ஒரு பக்கமாக இடுப்பை ஒடித்து, ஒசிந்து நின்ற ராமனும் சீதையும் கருங்கல் மேடையில் நிற்க, அந்தப் பக்கம் லஷ்மணன் படு சீரியஸாக உள்ளே வருபவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். அனுமன் கீழே உட்கார்ந்து தட்டிலிருந்த சர்க்கரைப் பொங்கலில் முந்திரிப் பருப்பை எண்ணிக் கொண்டிருந்தான்.

''சரி சரி, அதோ பார். கரை வேட்டியும் நீலச் சட்டையுமா வரான் பாரு, அவன்தான் உன் குறையைத் தீர்க்கப் போறவன்.''

''எந்தக் குறை?''

''அப்ப, நிறைய இருக்கா?''

''இருக்கு. நீங்க சொல்லுங்கோ''

''வெளிய எங்கியும் கூட்டிட்டுப் போக லேம்பியே. உற்சவம் வந்தாக்கூட ஊர் எல்லையைத் தாண்டிப் போக முடியலைன்னு குறைப்படுவியே, அதைச் சொன்னேன். நாம போகப் போறோம்.''

''எங்க? அயோத்திக்கா:?''

''ஐயோ, வேணாம்பா. அங்க ஒரே களேபரமாயிருக்கு. புடிச்சி உள்ள போட்டுடுவாங்க.''

''பின்ன எங்க?''

''ஊர் எல்லை இல்லை. நாட்டோட எல்லையையே தாண்டி அப்ராட் கூட்டிண்டு போக வந்திருக்கான் இவன்''

''மெய்யாகவா? பாஸ்போர்ட், விசா...?''

''அசடு, நமக்கு அதெல்லாம் கிடையாது. ஆனா...''

''ஆனா என்ன?''

''கூட்டிட்டுப் போக இவனால முடியுமான்னுதான் தெரியலை''.

முணுமுணுத்துக் கொண்டே உட்கார்ந்திருந்த அனுமனைத் தவிர, மற்ற மூவரும் அவனை உற்றுப் பார்த்தார்கள்.

பழனிவேலு மற்ற கரை வேட்டிகளைப் பிரிந்து உள் பிராகாரத்து மண்டபத்திலிருந்த பீடத்தைப் பார்த்தான்.

உள்ளே உற்சவ மூர்த்திகள், ராமன், சீதை...

அவன் பாக்கெட்டிலிருந்த செல் 'புள்ள குட்டி பெத்துகிட்டு கட்டிக்கலாமா?' பாட, ஓரமாக ஒதுங்கினான்.

''ஆமா தமிழ்மணி, வந்து பாத்திட்டேன். சரக்கு இருக்கு. பஞ்சலோகம்தான். நாம அஞ்சு ரூவா, பேசியது சரிதான்'

"...."

'அதெல்லாம் ஒண்ணுமில்ல. சின்ன கிராமந்தான். போலீஸ் ஸ்டேஷன் இரண்டு கிலோ மீட்டர். ஜனங்க பூச்சி மாதிரி இருக்காங்க. பிராப்ளம் இருக்கும்னு தோணலை.''

"..''

"நாளைக்கு மாநாடு முடியுது. ஜனங்க அப்பிடியே போயிடுவாங்க. ராத்திரி ஒரு மணி ஒண்ணரைக்குள்ள வேலையை முடிச்சிடுவேன். முடிஞ்சதும் கால் பண்றேன். உடனே கிளம்பிடு. நான் மெயின் ரோட்டில வந்து நிக்கறேன்''.

செல்லை ஆஃப் பண்ணிவிட்டு பழனிவேலு மறுபடி அவர்களை நோக்கி வந்து, நின்று உற்றுப் பார்த்தான்.

"ஆளு ஸ்டைலாத்தான் நிக்கறாரு. நாலு பேரும் சேர்த்து எப்படியும் ஒரு இருவது இருவத்தஞ்சு கிலோ தேறும். தூக்கிட்டு மெயின் ரோடு வர வரைக்கும் கஷ்டமாத்தான் இருக்கும். என்னது...? சிலைக்குக் கீழே கருங்கல்ல என்னவோ எழுதி வைச்சிருக்கு? தமிழ்தானா?''

எழுத்துக் கூட்டிப் படிக்க முயற்சித்தான். தெலுங்கு டப்பிங் பட வசனம் படிப்பதுபோல இருந்தது.

"....... ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிவர்மன் யாண்டு மூன்றாவது வடகரை ஸ்ரீவீர நாராயண அரையன் நந்தா விளக்கெரிக்க வேணுமாயும், ஸ்ரீமூர்த்தங்கள் ஊரெல்லையைத் தாண்டலாகாது என விதித்திருக்கிறபடியால்... பால் நானாழியும், பலம் நெய் உழக்கும்...''



"என்னது? ஊரெல்லையைத் தாண்டக் கூடாதா? போய்யா... கன்ட்ரி பார்டரே தாண்டப் போறே... நைட் வந்து

பேசிக்கறேன்..''

திரும்பி மெயின் சன்னதிக்கு அருள்மிகு கோதண்டராமனிடம் வந்து, தீர்த்தமும் சடாரியும் வாங்கிக் கொண்டு, சர்க்கரைப் பொங்கலுடன் இரண்டு வடையும் பெற்றுக் கொண்டு, வெளி மண்டபத்தில் கரை வேட்டிகளுடன் வந்து உட்கார்ந்தான்.

எதிரில் நின்றிருந்தவர்களை 2.50 டிக்கெட்டுக்கு ஐம்பது ரூபாயை நீட்டினவர்களைப் பார்க்கும் கண்டக்டர் போலப் பார்த்தார் ஏ.சி.

''என்னய்யா வந்து, போயி... ஏட்டு லெவலைத் தாண்ட மாட்டீங்கய்யா நீங்க. ஆளைக் கோட்டை விட்டுட்டு வந்துட்டீங்க. ராஜசேகர் எவ்ளோ கஷ்டப்பட்டு ட்ரேஸ் பண்ணாரு... வீணாப் போச் செய்யா.... எங்க அவரு?''

குடித்தனங்களுக்கு நடுவே குடித்தனமாகக் குடியேறிவிடும் ரேஷன் கடைகளைப் போல, தி.நகரின் வடக்குக் கோடியில் உஸ்மான் ரோடிலிருந்து சின்னதாகக் கிளைவிட்ட அந்தச் சின்னத் தெருவுக்குள், அபார்ட்மெண்ட்டுகளுக்கு நடுவே முளைத்திருந்தது அந்தச் சின்ன வீடு. காவல் துறையின் ஒரு பிரிவு, என்றால் நம்புவதற்குக் கஷ்டமாக இருக்கும். ஐடல்விங்! மாருதி ஜீப் மட்டும் வெளியே நிற்கும். யூனிபார்ம் கிடையாது. சிவப்புப் பெயிண்ட் கிடையாது, வாசலில். 303 ரைபிளோடு நிற்கும் கான்ஸ்டபிள் கிடையாது. வந்து போகிற ஆட்களைக் கொண்டு ஏதோ ஜிம் நடத்துகிற இடம் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

கொஞ்சம் ஒதுங்கலாம். ராஜசேகர் வரார்.

டீ-ஷர்ட்டில் விண்ணென்று இருந்தார். முகத்தில் கவலை ஃபேஸ் பேக் போட்டிருந்தது. உள்ளே நுழைந்து ஏ.சி.யின் முன் விறைப்பாக நின்றார்.

''என்ன ராஜ சேகர். ஆளை விட்டுட்டீங்க. கொஞ்சம் கேர்ஃபுலா இருக்கக் கூடாதா? இவங்கள நம்பி விட்டுட்டு... சே... ஓட்டல்ல அந்த ஜெர்மனிக்காரனா, ஆஸ்திரியாக்காரனா... இருக்கானா? அவனும் போயிட்டானா?''

''இருக்கான் சார்''

''இருந்து என்ன பண்றது? உங்க ஒரு மாச அலைச்சல் வேஸ்ட். எங்கிருந்து சிலையைக் கொண்டு வரப் போறான் பழனிவேலு?''

''தெரியலை சார்''

''கூட யார் யார் இருக்கானுங்க?''

''ஒருத்தன்தான் தெரியும் சார். தமிழ்மணி''

''நோ, யூஸ் ராஜசேகர், போறாது. நீங்க டைரக்ட் ரெக்ருட். விவரம் போறாது. நான் இந்த ஃபைலை ராமதாஸுக்கு மாத்தறேன். எனக்கு வேற வழியில்லை. ஒரு மாசம் ஆயிடிச்சி. நீங்க ரிப்போர்டே தரலை.''

''எனக்கு இன்னும் பத்து நாள் டயம் தாங்க சார். ஆளுங்களைப் புடிச்சிடறேன், ரெட் ஹேண்டடா''

''நோ. நான் மேல பதில் சொல்ல முடியாது. யு ஆர் ரிலீவ்ட் ஃபிரம் திஸ் கேஸ். ஹேண்ட் ஓவர்ல சைன் பண்ணுங்க... ஸாரி''

ராஜசேகர் வெறுத்துப் போனார். வருஷத்தில் இரண்டு மூன்று முறை மட்டும் சிலைகளைக் கடத்தி விற்றுவிட்டுக் காணாமல் போய் விடுகிற பழனிவேலுவை, அவர் கஷ்டப்பட்டுக் கண்டு பிடித்து, அந்த ஆஸ்திரியாக்காரனிடம் பேரம் பேசியதைத் தெரிந்து மோப்பம் பிடித்திருந்தார்.

''சார், எனக்கு ஒரு பத்து நாள் லீவு வேணும்'' ராஜசேகரின் கோபம் ஏ.சி.க்குப் புரிந்தது. ''சரி, எடுத்துக்கங்க'' என்றார்.

வெளியே வந்தவருக்கு வெறுப்படித்தது. குவார்ட்டர்ஸுக்கு வந்தபோது, பக்கத்து ஃபிளாட் கருப்பசாமியின் மனைவி குரல் கொடுத்தாள்.

''சேகர் தம்பி உங்கம்மா போன் பண்ணாங்க. ஊருக்கு வரச் சொன்னாக.

## பார்த்துச் சொல்லு பாகிஸ்தான் கிளியே!

உருது எழுத்துகளைக் கவனியுங்க! இவர் பாகிஸ்தான் கிளி ஜோசியர். பாகிஸ்தானில் வேலை இல்லாத் திண்டாட்டம் அதிகம். அதனால் படித்த வேலை இல்லாத இளைஞர் ஒருவர் ராவல் பிண்டி நகர வீதியில் கிளி ஜோசியம் சொல்கிறார்!

– வில்லவன் கோதை

இரண்டு மாசமா போவேல்லியாமில்ல. ஏன்?" ராகத்தோடு அவள் கேட்டதற்கு ராஜசேகர் பதிலேதும் சொல்லவில்லை. உள்ளே நுழைந்தார்.

சில்லென்று ஃபிரிட்ஜ் தண்ணீரைக் குடித்துவிட்டு உட்கார்ந்தார். "பத்து நாள் லீவு கேட்டாச்சு. என்ன பண்றது?" யோசித்தார். "ஊருக்குப் போலாம். அம்மாவப் பார்த்தா மாதிரியும் இருக்கும். ஒரு சேஞ்ச் தேவை இப்ப"

போனை எடுத்து தி.நகர் ஸ்டேஷனைக் கூப்பிட்டார். "கதிரேசனா? ராஜசேகர் பேசறேன். திருச்சிக்கு ஒரு டிக்கெட் வேணுமே. கொஞ்சம் பாக்கறியா... இன்னைக்கேதான்... ஆமாம்."

மாலை மூன்று மணிக்குப் பதில் வந்தது. "இன்றைக்கு டிரெயின், பஸ் எல்லாம் ஃபுல். நாளைக்கு வேண்டுமானால் பார்க்கலாம்."

போனை வைத்த ராஜசேகர் தீர்மானித்தார். வராண்டாவில் நின்றிருந்தது புது பைக். ஹூடிபா... பா... ஆ.

**கோ**யில் பின் மதிலேறி உள் பக்கம் குதித்தான் பழனிவேலு. தடதட வென்று பெருச்சாளி ஓடியது. சுற்றி வந்து உள் மண்டபத்திற்குள் நுழைந்தான். நிதானமாக சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, கித்தான் பையிலிருந்து பொருட்களை எடுத்து வரிசையாக அடுக்கினான். அரக்கு மெழுகு, நுனியில் வளைந்த கம்பி, பாம்பு சீறுவதுபோல் சப்தம் போடும் ஜப்பானின் மின்சார ரம்பம்.

அரக்கை கம்பியில் தடவி விட்டு ரம்பத்தை ஓடவிட்டான். பதினைந்து நிமிஷம். நான்கு கம்பிகள் ஒரே லெவலில் அறுபட, வளைத்து நெம்பி, விலக்கி, உள்ளே நுழைந்தான். நான்கு பேரையும் பக்கத்தில் தொங்கிய சிலையால் சுற்றி, கித்தான் பைக்குள் இறக்கி இறுகக் கட்டினான்.



செல் போனை ஒற்றி தமிழ் மணியைக் கூப்பிட்டான். "தமிழு, வேல முடிஞ்சாச்சு. மெயின் ரோடுக்கு வந்துடு... என்ன? தலைவர் பேசறாரா? ச்சீ.. கௌம்பு. லேட் பண்ணே, கொன்னுடுவேன்... வந்து சேரு."

வெளிப் பிராகாரத்துக்கு மூட்டையுடன் வந்தபோது, வெளியில் ஏதோ சத்தம் கேட்டது. பின் பக்கமாக வந்து கயிற்றில் ஏறி உச்சிக்கு வந்தவன் மேல், டார்ச் வெளிச்சம் பட்டது.

வேட்டியை மடித்துக் கொண்டு கிழவர் ஒருத்தர் கொஞ்ச தூரத்தில் தெருவோரமாக நின்றிருக்க, "அடேய்... ஆர்றா அது?" குரல் கொடுத்தார்.

சரசரவென்று இறங்கியவன் மூட்டையுடன் இடது பக்கக் கிணற்றைத் தாண்டி, முள் வேலிக்குள் புகுந்து, சரிந்து இறங்கிய வயலில் கால் வைத்து, வரப்பின்மீது ஏறி, மெயின் ரோட்டை நோக்கி ஓடினான்.

பின்னால் குரல் பலமாகக் கேட்டது, "அடேய், வெங்கிட்டு, கிட்டாம்பீ.... மாதூ... ஸ்ரீதரா..."

மெயின் ரோடு தூரத்தில் தெரிய, திருப்பத்தில் ஒரே ஒரு மின் கம்பம் வெளிச்சம் துப்பிக் கொண்டிருந்தது. பழக்கமான ஓட்டத்தில் ரோட்டைப் பிடித்தபோது, தூங்கு மூஞ்சி பஸ் ஒன்று கடந்து போனது.

பின்னால், தூரத்தில் கம்புகளும், பந்தங்களுமாக ஆட்கள் ஓடி வருவது தெரிந்தது. மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓடினான்.

"இந்தத் தமிழ்மணி சீக்கிரம் வந்தால் தேவலை... ஆ.. அதோ ஹெட்லைட்... வந்திட்டான்...."

ஹெட் லைட் நெருங்கியது... "தமிழ் இல்ல போலிருக்கு. சரி, எவனாயிருந்தா என்ன? மடக்கி ஏறிக்கிட்டு ஓட்ட வைக்கலாம்."

உள் நிஜார்ப் பையிலிருந்து மடக்குக் கத்தியை எடுத்து விரித்தான் பழனிவேலு.

மின் கம்ப வெளிச்சத்தில் எதிரில் ஆள் நிற்பதைப் பார்த்து விட்டு, பைக்கைப் பத்தடி தூரத்தில் நிறுத்தி, கீழே இறங்கினார் ராஜசேகர்.

●




• பட்டிமன்ற தொடக்க விழாவில்...



• அறிவொளி

# சுருக்குப் பையும் வங்கி லாக்கரும்!



• சந்தியா



• கி. சேகர்



• ப்ரியா

ஆயிரத்து முந்நூறு வண்ண மயில்கள் அன்ன நடை நடந்து ஓரிடத்தில் வந்தமர்ந்தால், அதன் அழகு கற்பனைக்கு எட்டாதது. கிராமத்து மண் வாசனையுடன், நகரத்து நாகரிகங்களையும் தன்னுள் அடை காத்துக் கொண்டிருக்கும் மண்ணச்சநல்லூரில் அமைந்துள்ள சிதம்பரம் பிள்ளை மகளிர் கல்லூரியில் தான் அக் காட்சியைக் காண நேர்ந்தது. கல்லூரியின் கௌரவக் கல்வி ஆலோசகர், முனைவர் கி. சேகர் வரவேற்க, முதல்வர் (பொறுப்பு) ந. விஜயசுந்தரி வாழ்த்த, கல்கி ஆசிரியர் சீதா ரவியின் அறிமுக உரைகளுடன் இனிதாய்த் துவங்கியது கல்லூரிப் பட்டிமன்றம்.

பட்டிமன்றப் பகலவன் முனைவர் அ. அறிவொளியை நடுவராகக் கொண்டு, 'தேச வளர்ச்சி என்பது கிராம வளர்ச்சியே! நகர வளர்ச்சியே!' என்கிற தலைப்புகளில், இரு அணி மாணவிகளின் மேடைப் பேச்சில் அனல் பறந்தது. இனி பட்டிமன்ற அரங்கு...

தேச வளர்ச்சி என்பது...







* கனிமொழி



* செலின்



* உமாராணி



* ரேகா



* திலகவதி



* விஜயசுந்தரி

**கிராம வளர்ச்சியே! - இரா. ரேகா.**

மனிதன் உயிர் வாழ மூச்சுக்காற்று முக்கியமானது. தேச வளர்ச்சிக்கு மூச்சுக் காற்றாய் அமைந்திருப்பது கிராம வளர்ச்சியே. மனித உயிர்களைப் பேணும் உணவை உற்பத்தி செய்வது, கிராமத்தின் வயல்களே!

நகரத்துக் கலப்படக் கலாசாரத்தால சந்து பொந்தெல்லாம் கிளினிக் வந்துடுச்சு. நம்முடைய குடியரசுத் தலைவர் சொல்லியிருக்கார், "இந்திய மக்களின் ஒவ்வொரு நபரின் மருத்துவச் செலவுகளை மட்டும் குறைத்து விட்டால் போதும். பொருளாதாரத்தில் நாம் உயர்ந்து விடலாம்" என்று. கிராமங்கள்லதான் ஆரோக்கியமான உணவு கிடைத்து வருகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக, தேச வளர்ச்சிக்கு நகரங்கள் எப்படி உதவியாக இருக்க முடியும். எங்கள் கிராமத்து மனிதர்கள் கடும் உழைப்பாளிகள். தேச வளர்ச்சியில் கிராமங்களின் பங்கு என்பது அஸ்திவாரக் கற்கள் போன்றது. நகரங்களின் பங்கானது அதன் மேலெழும்பியுள்ள கட்டிடம் போன்றது.

**நகர வளர்ச்சியே! - ரெ. சத்தியா**

கிராமங்களில் இருப்பதோ மூட நம்பிக்கை. நகரங்களில் இருப்பதோ மனித நம்பிக்கை. ஒரு தனி மனிதனின் எண்ணங்களுக்குச் செயல் வடிவம் தந்து சாதித்துக் காட்ட வாய்ப்புகள் நகரங்களில்தானே அதிகம்.?

உடல்நிலை மோசமாகிப் போனால் உடனே 'டவுன் ஆஸ்பத்திரிக்கு'தானே வந்து சேர்கிறீர்கள்? நகரத்து மருத்துவ மனைகள்தான் பலரின் உயிரைக் காப்பாற்றி வருகிறது.

தீவிரவாதம், போதை மருந்துகள் நகரங்கள்லதான் அதிகமா தலைவிரித்து ஆடுதுங்கறாங்க. போதை மருந்து எங்கேயிருந்து விளைஞ்சு வருது? கிராமத்துக் காடுகள்லதானே? எங்களோட அடுக்குமாடி வீடுகள்ல அதெல்லாம் விளையறது இல்லீங்க.

திண்டுக்கல் நகரத்து ஐந்து வயதுச் சிறுவன் அகில். இன்று கணிப்பொறியில் பல சாதனைகள் செய்து வருகிறான். கணிப்பொறியில் போட்டோ டிசைன் உருவாக்குவது, பேக்கிரவுண்ட் மாற்றுவது, வீடு கட்ட பிளான் வடிவமைப்பது என புகுந்து விளையாடுகிறான். நானூறு வகையான மாயச் சதுரங்களை கணிப்பொறியில் அவன் உருவாக்கி வைத்துள்ளான்.

**கிராம வளர்ச்சியே! - ம. செலின்**

மருத்துவத்துறையில் நகரங்கள் முன்னேறி விட்டதாகக் குறிப்பிட்டார்கள். அதற்கான மூலிகைகளையும், மூலப் பொருட்களையும் விளைவித்துத் தருவது எங்கள் கிராமத்து மண்தான்.

உங்கள் நகரத்து 'மன்மதராசா' பாடல் விவேகத்தையும், வீரத்தையும் வளர்த்து விடாது. எங்கள் கிராமத்து நாட்டுப்புறப்





பாடல்கள் இளைய சமூகத்தினரிடையே விவேகத்தையும், வீரத்தையும் நிச்சயம் வளர்க்கும்.

எங்கள் கிராமத்து இளைஞன் படிக்கிறான். வேலை ஏதுவும் கிடைக்கவில்லையா? சும்மா ஊர் சுற்றுவதில்லை. வயலில், காடு கரைகளில் இறங்கி, உழைக்க ஆரம்பித்து விடுகிறான். அவன் பங்குக்குக் கிராம வளர்ச்சிக்கு, தேச வளர்ச்சிக்குப் பாடுபட ஆரம்பிச்சுடுறான்.

**நகர வளர்ச்சியே! - ஜா. உமாராணி**

கிராமங்களில் வளங்கள் இருக்கலாம். ஆனால் அவற்றின் வளர்ச்சிக்கான வாய்ப்புகள் அங்கே மிகவும் குறைவு. முப்பது விழுக்காடு மட்டுமே கல்வியறிவு கொண்ட கிராமங்களை முன்னிறுத்தி, ஒரு தேசம் எப்படி வளர்ச்சி பெற்றதாகக் கூற முடியும்?

கிராமத்துப் பொருளாதாரம் ஒரு பாட்டியின் இடுப்பில் செருகியிருக்கும் சுருக்குப் பை போன்றது. நகரத்துப் பொருளாதாரம் நகர வங்கிகளின் லாக்கர்களைப் போன்றது.

தன் வீட்டு எருமை மாட்டைக் குளிப்பாட்டுவது அவமானமெனக் கருதிய கிராமத்து இளைஞன், அரபு நாடுகளுக்குச் சென்று அந்நிய ஒட்டகங்களைக் கழுவிக் கொண்டிருக்கிறான்.

**கிராம வளர்ச்சியே! - அ. பிரியா**

உங்கள் நவீன விஞ்ஞானத்தில் ஓர் ஆணை பெண்ணாக மாற்றி விடலாம். ஒரு பெண்ணை ஆணாக மாற்றி விடலாம். ஒரு சோற்றுப் பருக்கையை உங்களால் உருவாக்கிக் காட்ட முடியுமா?

நகர்ப்புறங்களில் மோட்டார் வாகனப் புகைகளும், தொழிலகக் கழிவுகளும் சுற்றுப் புறச் சூழலைக் கெடுத்து வைத்துள்ளன. அதனால்தானோ என்னவோ, "அவசரமாய் சுவாசிக்க வேண்டும். காரோட்டி - ஊருக்கு வெளியே போ!" என்கிறார் நம் கவிஞர்.

**நகர வளர்ச்சியே! - ம. கனிமொழி**

ஒரு தேசத்தின் வளர்ச்சி என்பது அங்கு நிலவும் ஒற்றுமை, தொழில் வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சியைப் பொறுத்தது. இந்த மூன்றும் நகரங்களில்தான் பூரணமாய் உள்ளன.

# புக்பேங்க்

## கோயில் நகரம் காஞ்சிபுரம்
**- பு.மா.ஜயசெந்தில் நாதன்.**




'**எ**ன்ன, எந்தத் தெருவில் திரும்பினாலும் ஒரு கோயில், பட்டுப்புடவை கிடைக்கும்; அவ்வளவுதான்' என்று வெகு சாதாரணமாக காஞ்சியைப் பற்றி எண்ணுபவர்கள் வாசிக்க வேண்டிய நூலிது. சிற்பத்தையும், ஞானத்தையும், பண்பாட்டையும், அறிவையும், அழகையும், கல்வியையும், ஞானத்தையும், பழந்தமிழகத்தின் அத்தனை சிறப்புகளையும் உள்ளடக்கி, 'நகரேஷு காஞ்சி' என்று பெருமை பெற்றதன் காரணம் இதைப் படித்தால் விளங்கும். நூலின் ஆக்கம் பகீரதப் பிரயத்தனமென்பதும் விளங்கும்.

**இந்து சமயமன்றம், ஸ்ரீசங்கர மடம், காஞ்சிபுரம். விலை : ரூ.75/-**

## பாதங்களில்லாமலும் பயணிக்கலாம்
**- கீர்த்தி**




**வே**ர்களில் பூப்பூப்பது இயற்கைக்கு விரோதம்தான். ஆனால் பார்வையில், மூச்சில், வார்த்தையில், கவிஞருக்கு ஆழ வேர்விட்டிருக்கும் காதல், நுணுக்கமான கவனிப்பையும், கவனித்ததில் லயித்ததையும், கவிதைகளாகப் பூக்க வைத்திருக்கிறது. காதலின் உணர்வுகளே அழகான கவிதைகளாய் மணம் வீசும் தொகுப்பு.

**நிவேதிதா பதிப்பகம், எண் 1/1 3வது**

நகரங்களில்தான் பொருளாதாரம் செழித்தோங்கி எல்லோரது வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்தியுள்ளது.

நான் புன்னகையை எடுத்து வைத்தேன்; வானம் வைகறையை எடுத்து வைத்தது. நான் கண்ணீரை எடுத்த வைத்தேன். வானம் மழையை எடுத்து வைத்தது. நான் காதலை எடுத்து வைத்தேன்; வானம் நிலவை எடுத்து வைத்தது. நான் கவிதையை எடுத்து வைத்தேன். வானம் வானவில்லை எடுத்து வைத்தது. எங்களுடைய நகரங்களின் பெருமைகளை எடுத்து வைத்தேன். அந்த வானமே எங்களிடம் தோற்றுப் போனது.

### ஆய்வும் - தீர்ப்பும் :
### முனைவர் அ. அறிவொளி

நகரமானது தொழிலைச் சார்ந்துள்ளது. கிராமமானது நிலத்தை மட்டுமே சார்ந்துள்ளது. கல்வி மற்றும் மருத்துவ வசதிகள், இணைப்புச் சாலைகள், போக்குவரத்து வசதிகள், செய்தித் தொடர்பு பயன்கள் போன்றவை இல்லாத கிராமங்களே இல்லை, என்கிற நிலை உருவாக வேண்டும். அப்போது கிராமங்கள் எல்லாமே நகரங்களின் செல்வாக்கைப் பெற்று விடும். அதுதான் உண்மையான தேச வளர்ச்சி.

இந்தியா எப்படி இருக்க வேண்டும் என்று கற்பனை செய்து யோசித்தவர் மகாத்மா காந்தி. அவர் ஒருவர் மட்டும்தான் இந்தியாவை இந்தியாவாக ஆக்குவதற்கு யோசனை செய்தார். மற்றவர்கள் எல்லாம் இந்தியாவை ஒரு ரஷ்யாவாக, ஒரு அமெரிக்காவாக ஆக்குவதற்காக யோசனைகளைச் செய்தார்கள். ஒவ்வொரு கிராமமும் தன்னிறைவு பெற வேண்டும் என்று உழைத்தவர் காந்தியடிகள்.

கிராமங்களை வளர்த்தால்தான் நாடும் வளரும். இன்றைக்குள்ள கிராமங்கள் நகரங்களின் வசதிகளை எல்லாம் ஓரளவுக்காவது பெறுமேயானால், இந்தியா வளரும். தேச வளர்ச்சிக்கு மிக முக்கியம் இன்றைக்குள்ள கிராமம் அல்ல! ஒரு நகரத்தினுடைய வாய்ப்புகளை எல்லாம் பெற்றுத் திகழ இருக்கின்ற கிராம வளர்ச்சியே, ஒரு தேசத்தின் வளர்ச்சியாக இருக்க முடியுமெனத் தீர்ப்பு வழங்குகிறேன்.

படங்கள் : **ஜெய்**
தொகுப்பு : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**மாடி, புதூர் 13வது தெரு, அசோக் நகர், சென்னை-83. விலை : ரூ.35/-**

### சரித்திரம் படைத்த சாதனையாளர்
### - சி.வி. மலையன்

மு.க.ஸ்டாலின் மேயராகப் பொறுப்பேற்றிருந்த காலத்தில் சென்னை மாநகருக்காக ஆற்றிய பணிகள் புள்ளி விவரங்களோடு தரப்பட்டிருக்கின்றன.

சிங்காரச் சென்னையாக உருவாக உழைத்தவரின் போராட்டங்கள், சோதனைகள், சாதனைகள் யாவையும் சுவாரசியமான வரலாறாக வடிக்கப்பட்ட நூல்.




**மேகலா வெளியீடு, 6-பி, ஆத்ரேயபுரம் பிரதான சாலை, சூளைமேடு, சென்னை - 94. விலை : ரூ.200/-**




### தலம் தோறும் தமிழ்க் கடவுள்
### - குருஜி ஏ.எஸ்.ராகவன்

ஆறுபடை மட்டும்தானா குமரனுக்கு? அன்பர்கள் இதயமெல்லாம் அவன் வீடுகள்தாம். அதிலும் தமிழகத்தில் திரும்பிய திசையெல்லாம் அவன் திருத்தலங்கள்தாம். அகத்தே அருள் சேர்க்க, புறத்தே புண்ணியம் பெற, அப்படிப்பட்ட வீடுகள் முப்பத்தைந்தை வரிசைப்படுத்தி, விளக்கும் நூல். 'கல்கி'யில் தொடராக வந்து பெரும் வரவேற்பு பெற்றதும் கூட!

**வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17. விலை : ரூ.70/-**

# ஏபாரியல் பங்காளன்!

ஒரு நாள், கிளப் ஹவுஸில் நண்பர் கிருஷ்ண மூர்த்தியின் தயவில் மதிய உணவு சாப்பிட்டு முடித்தபோது, எனக்கு டெலிபோன் அழைப்பு வந்திருப்பதாகச் சொன்னார்கள். "இந்த நேரத்தில் நமக்கு யார் போன் பண்ணுவார்கள்? நாடகத்துக்குத் தேதி கேட்பார்களா?'' என்றெல்லாம் யோசித்தபடியே "ஹலோ!" என்றேன்.

மறுமுனையிலிருந்தவர் "நான் நடிகர் பாலாஜி பேசறேன். நேத்து நீ நடிச்ச நாடகம் பார்த்தேன். பிரமாதமான நடிப்பு! ஒல்லியான இந்த மனிதருக்குள்ளே இத்தனை திறமையான்னு பிரமிச்சுப் போயிட்டேன். உடனே என்னை வந்து பார். வரியா?'' என்று கேட்டார்.

''உடனேவா? எதுக்குன்னு தெரிஞ்சுக்கலாமா?" என்று நான் பேசிக் கொண்டு இருந்த போதே இடைமறித்து, "என்னோட காரை அனுப்பி வைக்கிறேன். சிவப்பு நிற அம்பாஸடர். வண்டி நெம்பர் 963. புறப்பட்டு வா! நேரே பேசிக்கலாம்'' என்று போனை வைத்து விட்டார்.



• வாலி

அந்த பிரமிப்பிலிருந்து நான் மீள்வதற்குள்ளே, பாலாஜியின் டிரைவர் என்னைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார். காரில் ஏறிக் கொண்டேன்.

எழும்பூர் பாந்தியன் ரோடில் பாலாஜியின் வீட்டுக்குப் போனேன். என்னை ஆரத்தழுவி வரவேற்றார் பாலாஜி.

"இரண்டு பேரும் ரொம்ப நெருக்கமாகி விட்டோம். இனிமேல், நீ என்கூடவே தங்கி இருக்கலாம். காரை எடுத்துக் கொண்டு கிளப் ஹவுஸுக்குப் புறப்பட்டுப் போய் உன் பெட்டி, படுக்கை மற்றச் சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டு வந்துவிடு. இனிமே, இதுதான் உனக்கும் வீடு. நீயும் என் குடும்பத்தின் அங்கமாகிவிட்டாய்! ம்... புறப்படு..." என்றார்.

சில விநாடிகள் எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு வழியாக சுதாரித்துக் கொண்டு தயங்கி நின்றேன்.

"என்ன தயக்கம்?" என்றார்.

"காலி பண்ணி எடுத்துக் கொண்டு வருகிற அளவுக்கு எனக்குச் சொந்தமான பொருட்கள் எதுவுமில்லை."

"சரி! சாப்பிட்டு விட்டாயா?"

"சாப்பிட்டாச்சு! ஆனாலும் பரவாயில்லை. சாப்பிடலாம்..." என்று இழுத்தேன்.



• பாலாஜி

உடனே தமது சகோதரி மீராவை அழைத்து, எனக்கு சாப்பாடு போடச் சொன்னார். டைனிங்டேபிளில் உட்கார வைத்து, பெரிசாய் ஒரு தட்டு போட்டு, இனி சாப்பிட வயிற்றில் இடம் கிடையாது என்று சொல்கிறாற்போல விருந்து போட்டார். சாப்பிட்டு முடித்தபோது என் கண்களில் ஆனந்தக் கண்ணீர்.

அடுத்து, என்னை ஓர் அறைக்கு அழைத்துக் கொண்டு போனார். சகல வசதிகளும் கொண்ட அந்த அறையின் மத்தியில், பெரிய கட்டில் போடப்பட்டிருந்தது. அதில் பிரம்மாண்டமான

மெத்தை வெல்வெட் விரிப்புடன் விரிக்கப்பட்டிருந்தது.

''இதெல்லாம், மகாராஜாக்களும், உங்களை மாதிரி சினிமா நடிகர்களும் படுத்துத் தூக்க வேண்டியது. என்னைப் போன்ற சாதாரண ஆசாமிகளுக்கு இதோ... இப்படி கீழே படுத்தாலே தூக்கம் வந்துவிடும்'' என்றேன்.



★ 'உத்தரவின்றி உள்ளே வா' - படத்தில்
நன்றி : ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

# 16 சிரித்து வாழ வேண்டும்

''உனக்கு இது பிடிச்சிருக்கில்லையா? வேறே ஒண்ணும் பேசாதே!'' என்று வாயை அடைத்துவிட்டார்.

''இங்கேயே படுத்து, ரெஸ்ட் எடுத்துக் கொள். நான் கொஞ்சம் வெளியிலே போயிட்டு, சாயந்திரம் வந்திடறேன்'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

மாலையில் திரும்பியவுடன், என் அறைக்கு வந்த பாலாஜி ''ம்... போட்டுக்க டிரஸ் இருக்கா?'' என்றார்.

''போட்டிருக்கிற டிரஸ்ஸ துவைச்சால் காய்ஞ்சிடும். எடுத்துப் போட்டுக்க வேண்டியது தான்.''

''நீ போட்டிருக்கிற டிரஸ்ஸைத் தோய்ச்சா, காயாது, கிழிஞ்சிடும். முகம் கழுவிக் கொண்டு புறப்படு... கமான் க்விக்...'' என்றார்.

அவருடன் காரில் புறப்பட்டேன்.

'குபேர்ஸ்' என்ற பிரபல துணிக்கடைக்கு அழைத்துக் கொண்டு போனார். தினசரி அணிந்து கொள்ள பேண்ட், சட்டை, தவிர, எனக்கு கோட்டு, சூட்டு எல்லாம் வாங்கிக் கொடுத்தார்.

வீடு திரும்பியதும் 'புகாரி' ஓட்டலுக்குப் போன் செய்து விதம் விதமான உணவு ஐட்டங்களுக்கு ஆர்டர் கொடுத்தார். ஒரு மணி நேரத்தில் எல்லாம் வந்து சேர்ந்தன. இவை எல்லாமாகச் சேர்ந்து என்ன விலை இருக்கும் என்று நேரடியாகக் கேட்காமல், ரகசியமாய் விசாரித்தபோது, நூற்று இருபது ரூபாய் என்று தெரிந்து கொண்டேன்.

'அடேயப்பா! ரயில்வேயில், பிடித்தம் எல்லாம் போக, கைக்கு வரும் இரண்டு மாச சம்பளத்தை விட அதிகமாக, இவர் ஒரு நாள் டின்னருக்குச் செலவழிக்கிறாரே!' என்று நான் அசந்து போனேன்.

மறுநாள் காலை, நான் எழுந்திருப்பதற்கு முன்பே எழுந்து, ஷூட்டிங்கிற்குத் தயாராக இருந்தார் பாலாஜி. நான் எழுந்தவுடன் காபி, சுவையான டிபன் என்று ஒன்றுக்கும் குறைவில்லை. அவர் ஷூட்டிங்குக்குப் புறப்படுவதற்கு முன், என்னிடம் வந்து ''நல்லா ரெஸ்ட் எடு!'' என்று சொல்லிவிட்டு, தமது பாக்கெட்டில் கைவிட்டார்.

இருபது ரூபாயை என்னிடம் நீட்டினார். நான் ''இதெல்லாம் எதுக்கு? வேணாம்'' என்று மறுத்தபோது, ''பேசாம வாங்கிக்கணும். செலவுக்கு வைச்சிக்கோ'' என்றார்.



''நம்ம குப்புசாமி வீட்டு கல்யாணத்துக்குத்தானே போறீங்க...? எனக்கு ஒரு சின்ன ஹெல்ப் பண்ண முடியுமா?''

''சாரி சார்! எனக்கே ஜோடி செருப்பு தேவைப்படுது. எடுக்கணும்னு இருக்கேன்!''

- சீர்காழி வி.ரேவதி

பாலாஜியிடம் ராமசாமி என்ற மேக்அப் மேன் ஒருவர் இருந்தார். அவர் பாலாஜி எனக்கு பணம் கொடுத்ததைக் கவனித்து, "ஓசியில குடுத்தா, கூச்சப்படாம கை நீட்டிடுறாங்க மனுசங்க" என்று, என் காது படவே முணு முணுத்தார்.

இதில் வேடிக்கை என்னவென்றால், அதே மேக்அப் மேன் ராமசாமி, நான் சினிமாவில் பிரபலமானவுடன், எனக்கும் மேக்அப் மேன் ஆக இருந்தார். என்மீது மதிப்பும், மரியாதையும் கொண்டிருந்தார்.

அன்று பகல் நான் சாப்பிட உட்கார்ந்த போது, கிளப் ஹவுஸ் சாப்பாட்டுக் காட்சிகள் என் நினைவிலிருந்து மறைய மறுத்தன.

கையில் சம்பளம் வந்தவுடன், இந்த மாசம் வயிற்றுக்கு வஞ்சனை செய்யக் கூடாது என்று முடிவு செய்து, முன் கூட்டியே திட்டமிட்டு, ஒரு மாதத்துக்குத் தேவையான ஹோட்டல் சாப்பாடு டோக்கன்களை வாங்கி வைப்பேன். ஆனால் திடீரென்று பாதி டோக்கன்கள் காணாமல் போய்விடும். கேட்டால், "அவனவன், தினம் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுகிறபோது, ஒரு மாசத்துக்கு நிம்மதியாகச் சாப்பிட வேண்டும் என்று நீ மட்டும் நினைப்பது நியாயமா?" என்று சாப்பாட்டு டோக்கன் திருடியதை நியாயப் படுத்துவார்கள் சக நண்பர்கள்.

என் முன்னே போடப்பட்டிருந்த இலையிலிருந்து பொரியலை நான் எடுத்து வாயில் போட்டுக் கொண்டபோது, என் நினைவுக்கு வந்தவன் ஸ்ரீரங்கம் ரங்கராஜன் என்கிற கிளப்ஹவுஸ் சகா. (அவர்தான் கவிஞர் வாலி என்று பலர் யூகித்திருப்பீர்கள்)

ஹோட்டலிலிருந்து கேரியர் மீல்ஸ் எடுத்துக் கொண்டு வந்தால், அது ஒண்ணேகால் ரூபாய். ஓட்டலுக்குப் போய் சாப்பிட்டால், பணம் மிச்சமாகும் என்றாலும், கேரியரில் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு வந்து சாப்பிட்டால், அதை நாலைந்து பேர் பகிர்ந்து சாப்பிட்டுப் பசியாற முடியும். ஆனால், ஒருவரே ஒண்ணா கால் ரூபாய் போட முடியாதே. எனவே ஆளுக்கு நாலணா போட்டு, சாப்பாடு வாங்கிக் கொண்டு வருவோம். அதிலும் பல சமயம் சிக்கல் வரும். நாலு பேர் கிடைத்துவிடுவார்கள். ஆனால், ஐந்தாவதாக ஒருவர் நாலணா போட்டால்தான், சாப்பாட்டு வாங்க ஒண்ணே கால் ரூபாய் தேறும்.

அதுபோன்ற சமயங்களில் ஸ்ரீரங்கம் ரங்கராஜன் வருவான். நாலணா கொடுத்துவிட்டு, "பார்த்திங்களா! நாலு பேர் காசு போட்டும் பிரயோஜனம் இல்லை. கடைசியா நான் நாலணா கொடுத்தப்புறம் தானே உங்களால சாப்பாடு வாங்கிக் கொண்டு வர முடியுது? அதனாலே, கேரியரில் வரும் சாப்பாட்டில் எனக்கு ஒரு ஸ்பெஷல் பங்கு வேணும். பொரியல், பச்சடி இப்படி ஏதாவது ஒரு ஐட்டம் எனக்கு நிறைய கொடுத்திடணும்" என்பான்.

''அதுக்கென்ன எடுத்துக்கோ'' என்று சொல்லிவிட்டு, தேவி விலாஸ் ஹோட்டலுக்கு ஓடிப் போய், கேரியரில் சாப்பாடு வாங்கிக் கொண்டு வந்து, ரங்கராஜனுக்குத் தர வேண்டிய கூடுதல் பங்கைக் கொடுத்துவிட்டு, சாப்பிடுவோம். எனவேதான் பொரியல் சாப்பிட்டபோது பொரியல் பங்காளன் ரங்கராஜன் நினைவு வந்தது.

பாலாஜி வீட்டில் தங்கியபடி, நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தாலும், நான் ரயில்வே வேலையை விட்டுவிட வில்லை. அவ்வப்போது அங்கேயும் போய் தலையைக் காட்டுவேன். அப்படி ஒரு நாள், நான் ஆபீஸில் உட்கார்ந்து கொண்டிருந்த சமயம்தான் எனக்கு சினிமா வாய்ப்பு ஜன்னலைத் தட்டியது.

(சிரிப்பு தொடரும்)





# “மதுரை மண்ணைப் பூசிக் கொள்வேன்”

## –சபாநாயகர் காளிமுத்து

என் பிறந்த ஊருக்கு அடுத்தபடியாக நான் நேசிக்கும் ஊர் மதுரையே! அந்த நான்மாடக் கூடல்தான் என்னை எல்லா வகையிலும் வளர்த்தது. 1965 ஜனவரி மாதம் 25ம் தேதியை மறக்க முடியுமா! இந்தி எதிர்ப்புப் போர் கொழுந்துவிட்டு எரியத் துவங்கிய நாள். நான் தியாகராயா கல்லூரி மாணவன். நானும், கவிஞர் நா. காமராசனும் ராஜாஜி பூங்காவில் அரசியல் சாசனத்தை எரித்துச் சாம்பலாக்கினோம். கைது செய்யப்பட்டோம். ஆறு மாத காலம் சிறைத் தண்டனை. மதுரை இளைஞர்கள் மத்தியில் ஹீரோக்களாக உயர்த்தப்பட்டோம். இன்றும் அந்த நாள் மனப்பதிவில் அச்சாகி இருக்கிறது.

மதுரையில் நான் போகாத பகுதி கிடையாது. ஏறாத டவுன் பஸ் கிடையாது. காலையில் கல்லூரி ஹாஸ்டலிலிருந்து கிளம்பி, வைகைக் கரை ஓரம் ஆழ்வார்புரத்தில் இருந்த இளைஞர் எழுச்சி மன்றத்தில், திராவிட இயக்கப் பத்திரிகைகளை ஊன்றிப் படிப்பதிலிருந்து என் நாள் துவங்கும். கோனார் ஓட்டலும், இம்பீரியல் தியேட்டரும் நினைவில் என்றும் இருக்கும். ஒரு கிளாஸ் ஜில்ஜில் ஜிகர்தண்டாவுக்கு ஈடு இணை ஏது? (இப்போது சர்க்கரை வியாதி காரணமாக அதை அருந்த முடியவில்லையே என்ற ஏக்கம்!).

என் வாழ்க்கையின் கண்ணீர், புன்னகை, சந்தோஷம், துக்கம், உயர்வு, தாழ்வு, இன்பதுன்பம் எல்லாவற்றிலும் பங்கு கொண்டது மதுரைதான். என் மனைவிகள் இருவரும் மதுரைக்காரர்கள். சமீபத்தில் மறைந்த முதல் மனைவி நிர்மலாவை, மதுரையில் சந்தித்து காதல் மணம் செய்து கொண்டேன். எங்கள் காதலைத் தொட்டில் போட்டுத் தாலாட்டியது மதுரைதான். காதலித்த அந்த நாட்களின் பரபரப்பும், குறுகுறுப்பும் இன்னமும் சுகந்தமாக இனிக்கின்றன.

மதுரையில் தேர்தலில் நின்று நான் வென்றும் இருக்கிறேன், தோற்றும் இருக்கிறேன். எனக்கு அரசியல் ஞானத்தைப் போதித்தது மதுரைத் தாய்தான். புகழ்மிக்க பேச்சாளனாக என்னை பரிமளிக்கச் செய்ததும் மதுரைதான். அரசியலில் ஏதாவது புதுக் கருத்தைச் சொல்ல வேண்டுமென்றால் அதற்கு மதுரைதான் சரியான இடம். அங்குதான் தமிழகத்தின் அரசியல் பூமத்திய ரேகை ஓடுகிறது. அரசியல் சங்கப் பலகை அங்கேதான் இருக்கிறது.

எனக்கு விபூதி பூசும் வழக்கம் கிடையாது. அப்படி ஏதாவது நெற்றியில் பூசிக் கொள்ள விரும்பினால், அது மதுரை மண்ணாகவே இருக்கும்!

சந்திப்பு : ஸ்ரீநி

# தாம்பூலத்துக்குள் ஒரு சர்ப்ரைஸ்!



திருமணத்துக்கு முதல் நாள். கல்யாண மண்டபம் களை கட்டியிருந்தது. அணி வகுத்து நின்ற வகை வகையான கார்களுக்கு நடுவே வித்தியாசமாய் இரண்டு லாரிகள் வந்து நின்றன. பெண் வீட்டாரான மருத்துவமனைப் பணியாளர்களும், உறவினர்களும் அந்த லாரிகள் சுமந்து வந்தவற்றை, நிதானமாகப் பார்த்துப் பார்த்து வாங்கி இறக்கி வைக்கின்றனர். அத்தனையும் என்ன? வீட்டு உபயோகப் பொருட்கள் என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லை.

பாண்டிச்சேரி, 'குட்டி' நர்சரியிலிருந்து தருவிக்கப்பட்ட மரக்கன்றுகள் மற்றும் பூச்செடிகள். கல்யாணம் என்பது ஆயிரங் காலத்துப் பயிர். அதை நினைவூட்டும் விதமாக, தங்கள் மகளின் திருமணத்துக்கு வருகை தருவோர்க்கு, அவரவர் விரும்பும் மரக்கன்றுகளை நினைவுப் பரிசாக வழங்கி மகிழ்ந்தனர் திருவானைக்காவல் டாக்டர் ஜி. சுரேந்திரபாபு - மல்லிகா தம்பதி.

மண்ணுக்குள் வேர் விடுவதற்கு மரக்கன்றுகள். மனசுக்குள் வேர் விட? பாரதியார் பாடல்கள் சி.டி. பம்பாய் ஜெய்ஸ்ரீ, ராஜ்குமார் பாரதி, சுதா ரகுநாதன், உன்னி கிருஷ்ணன், பம்பாய் சகோதரிகள், சௌம்யா, நித்யஸ்ரீ என பிரபல இசைக் கலைஞர்கள் பாடிய தொண்ணூற்று ஒன்பது பாரதி பாடல்களைத் தொகுத்து வழங்கியுள்ளனர்.

- திரு

* புதுமணத் தம்பதி டாக்டர் கீர்த்தனா, டாக்டர் சிவகுமாருடன் பெற்றோர்.



# நீங்கள் கேட்டவை-தராசு

# கதைக்குத்தான் ஹீரோ என்கிறாரே தனுஷ்..?





* மையம் கொண்ட புயல்..!



* தேர்ந்தெடுத்த காலம் ...

● த. சத்தியநாராயணன், அயன்புரம்

? 'ஜெ'வை வரவேற்று காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள் விளம்பரம் செய்தது சரியா?

! அப்படி நடந்ததற்கான காரணங்களை ஆராய்ந்து, ஆரோக்கியமான மரபுகளை உருவாக்குவதற்குப் பதில், இளங்கோவனும் சோ.பா.வும் அடித்துக் கொள்வது நிச்சயம் சரி அல்ல.

● ஷோபியாப்ரியன், பூனாம்பாளையம்

? எந்தெந்த விஷயங்களில் எல்லை மீறுவது தவறில்லை...?

! புதிய ஹாரிபாட்டர் நாவலை (870 பக்கங்கள்) ஒரே மூச்சில் படித்து முடித்து, குழந்தைகள் தலைவலி வந்து தவிக்கிறார்கள். ஆகவே, நல்ல விஷயங்களில் கூட அளவு மீறக் கூடாது.



* யோசிக்க மறந்த விஷயம்...

● எஸ். இந்திரா, திருச்சி

? வதந்திப் புயல்...?

! 'அய்யா'வோ... 'பொய்யா'வோ... ஹேஷ்யக் கரையோரம் மையம் கொண்டிருக்கிறது.

● த. குமரேசன், காவல்கிணறுபுதூர்

? 'எந்த நாட்டுக்குச் சென்றாலும் அங்கே இந்தியர்கள் வெற்றிக்கொடி நாட்டி வருகின்றனர்' என அப்துல் கலாம் பெருமிதம் அடைந்திருப்பது பற்றி...?

! வெற்றிக்கொடி நாட்டாதவர்களுக்கு அயல்நாடுகளில் இடமில்லை சுவாமி... திருப்பி அனுப்பிவிடுவார்கள் - அகதிகளாகப் போயிருந்தாலொழிய!

● 'நகை' தி. மகராசன், கடமலைக்குண்டு

? பாக். மிகச் சிறிய நாடுதான்; அது இந்தியாவுக்கு அச்சுறுத்தலாக இருக்க முடியாது என்கிறாரே ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ்...?

! ஏவுகணைகள்; அவற்றின் முனைகளில் அணுகுண்டுகள் என்ற இன்றைய நிலையில் சின்ன நாடாவது பெரிய நாடாவது...? இப்போது வடகொரியா பற்றி அமெரிக்கா ஏன் கவலை கொள்கிறது? ஃபெர்னாண்டஸ் சிந்திப்பாரா...?

● கே. சம்பத், திருக்கழுக்குன்றம்

? தேவர் ஜெயந்திக்கு அனைத்துக் கட்சித் தலைவர்களும் அதிக முக்கியத்துவம் கொடுப்பது தங்களது சுயநலத்துக்காகத்தானே...?

! தேவருக்கு முக்கியத்துவம் தருவதில் தவறில்லை; ஆனால், அதன்மூலம் தேவர் சமூகத்தின் வோட்டுக்களை வளைத்துப் போட நினைப்பதுதான் வடிகட்டின சுயநல விவகாரம்.



• படுத்தி வைக்கும் பாடு... !



• மாற்ற முயலும் இமேஜ்

● ஜி. ஆரோக்கியதாஸ், சென்னை - 15

? 'செங்கல் சுமக்கும் பெண்ணின் காதில்கூட சிறு தங்கம் மின்னும். செங்கோல் சுமக்கும் ஜெயலலிதாவின் காது - கழுத்தில் ஒரு பொட்டுத் தங்கம்கூட இல்லை. இன்றைக்குத் தமிழகத்தை ஆள்கிறார்... இந்தியாவின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் ஆற்றல் ஜெயலலிதாவுக்குத்தான் உண்டு என்று சபாநாயகர் காளிமுத்து கூறியுள்ளது பற்றி...?

! இப்போது ஒரு புதிய இமேஜ் உருவாக்கப் பார்க்கிறார்கள். அத்தனை ஆபரணங்களையும் அணிந்து, அவரும் தோழியும் தங்க - வைரங்களில் ஜொலித்த இமேஜை மாற்ற முயற்சி நடக்கிறது.

● க. சதாநந்தன், வேங்கடத்தானூர்

? சில ஆண்டுகளுக்கு முன் தமிழகமெங்கும் சுவர்களிலும் விளம்பரப் பலகைகளிலும் கு.க. விளம்பரங்கள் சமுதாயச் சீர்திருத்த நோக்கில் வெளியிடப்பட்டன. இப்போது வெறும் எய்ட்ஸ் பயமுறுத்தல் எச்சரிக்கையாக இருக்கிறதே?

! கு.க. விளம்பரம் வேறு; எய்ட்ஸ் எச்சரிக்கை வேறு. இப்போது கு.க. பற்றிய பிரக்ஞை கணிசமாக வளர்ந்திருக்கிறது. எய்ட்ஸ் எச்சரிக்கையும் தேவைதான். ஆனால், புள்ளி ராஜாவின் பிதற்றல்கள் ஒழுங்கீனத்தையே வளர்க்கும்.

● ஆர். சுந்தரி, குளித்தலை

? பொடா சட்ட ஆய்வுக்குத் தமிழக அரசு சகாரியா குழுவுக்கு ஏன் இதுவரை விளக்கம் தரவில்லை...?

! விளக்கம் விளக்கமாக இல்லை; வெறும் பதிலாக இருந்தது. விளக்கம் தர அவசியமில்லை என்று தமிழக முதல்வர் கருதுவதோடு, மாநிலங்களின் உரிமை இப்போது பொடா சட்டத் திருத்தங்களால் பறிக்கப்பட்டிருப்பதாக வேறு பிரசாரம் நடத்த ஆரம்பித்திருக்கிறார். ஜனநாயகத்தின் அடிப்படைப் பண்புகளை அவர் புரிந்து கொள்ளவில்லை, அல்லது புரிந்து கொள்ள மறுக்கிறார்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? இன்றைய சமுதாயத்தில் யாரைப் பார்த்தால் உங்களுக்குப் பரிதாபமாக இருக்கிறது?

! கோயில் யானைகளைத்தான். காட்டில் சுதந்திரமாகத் திரிய வேண்டிய இந்த கம்பீரமான பிராணிகளை, நமது திருப்திக்காகப்



• சொல்ல விரும்பும் தத்துவம்!

பிடித்து வந்து, கடவுள் சேவையில் ஈடு படுத்துகிறோம். அவற்றின் இயல்பான பழக்க வழக்கங்கள் மாறி அவை இந்த வாழ்க்கைக்குப் பழகிப் போகிற நேரத்தில், இயற்கை உணர்வுகள் ஒரு பக்கம் வாட்டுகின்றன. இந்தப் பிரச்னையை எதிர்கொள்ள, அவற்றை இடம் பெயர்த்து மீண்டும் இயற்கைச் சூழலுக்கு இட்டுச் செல்ல முயன்றால், அவை மிரண்டுபோய் முரண்டு பிடிக்கின்றன. மொத்தத்தில் அவற்றைச் சித்திரவதை பண்ணிவிட்டு, அவை மதம் பிடித்து மனிதர்களைச் சித்திரவதை பண்ணுவதாகச் செய்தி வெளியிடுகிறோம்! இதைவிடப் பரிதாபம் வேறென்ன இருக்க முடியும்!

● சி. கார்த்திகேயன், சாத்தூர்

**? 'மத்திய சுற்றுச்சூழல் அமைப்பு திடீரெனக் கட்டட விதிகளைப் புகுத்தியது பற்றி...?**

! அது அறிவிக்கப்பட்ட காலகட்டம் காரணமாக, அரசியல் நோக்கம் உறுதியாகிறது. ஆனால், பிரும்மாண்டமான கட்டுமானங்களால் இயற்கை வளம் - குறிப்பாக நீர்வளம் பெரிதும் பாதிப்புக்குள்ளாகிறது என்பதும் நிச்சயம்தான். விதிகள் கடுமையாக்கப்படுவதும், புதிய விதிகள் புகுத்தப் படுவதும் நியாயம்தான்.

● என்.சுஜாதா, சென்னை - 61

**? பிரவீண் தொகாடியாவின் திரிசூலம் வழங்கும் நிகழ்ச்சிக்குத் தடை விதிக்கப் பட்டுள்ளதை, அரசின் சிறந்த நடவடிக்கை என்று பாராட்டலாமா...?**

! சர்வ நிச்சயமாக.

● எஸ். சரஸ்வதி, வேலூர் - 1

**? 'நம் நாடு சீர்கெட்டுப் போனதற்குக் கடவுள், காமம் என்ற இரண்டு விஷயங்களின் அதீத தாக்கம்தான் காரணம்' என்று இயக்குனர் வேலு பிரபாகரன் கூறியுள்ளதை ஏற்கிறீர்களா...?**

! நாம் கெட்டுப் போவதற்கு நாமேதான் காரணமேயொழிய, கடவுளோ, காமமோ அல்ல. முதலாவதற்குத் தலைவணங்கினால் இரண்டாவதைக் கட்டுக்குள் வைத்துக் கொள்ள முடியும் என்பது, நமது முன்னோர்கள் வளர்த்த பண்பு நெறி. நாம் ரிவர்ஸில் போய்விட்டு, கடவுளையும் காமத்தையும் பழிப்பது அபத்தம்.

● மு.ரா. பாலாஜி, கோலார்

**? ஓர் எழுத்தாளன் பேனாவை எப்போது அடகு வைக்கிறான்...?**

! ஆதாரமற்ற அவதூறுகளை எழுதும் போது; வன்முறையையும் மலின உணர்வுகளையும் தூண்டும்போது.

● ஒய்.எஸ்.ப்ரீதா, சென்னை - 12

**? 'கதைக்குத்தான் ஹீரோ, ஹீரோவுக்காக கதையில்லை' என்று தனுஷ் சொல்கிறாரே...?**

! சும்மாவா?... சொல்ல மறந்த கதை, உன்னைச் சரணடைந்தேன், பீஷ்மர், காதல் கொண்டேன், திருடா திருடி என்று கதையம்சம் கொண்ட படங்களின் வெற்றியல்லவா இப்படிப் பேச வைக்கிறது..! ஆனால் தனுஷின் அப்பா கஸ்தூரிராஜா இயக்கி வரும் ட்ரீம்ஸ் படத்தின் கதை சரியில்லையாமே..!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம் ★

**? குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பாத பெற்றோர் 500 ரூபாய் அபராதம் செலுத்த வேண்டுமாமே?**

! அவ்வளவு பணம் கட்ட வசதி இருந்தால், பெற்றோர் ஏன் குழந்தைகளை வேலைக்கு அனுப்பப் போகிறார்கள்...? கேலிக் கூத்து!

❐ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எம்.சம்பத், 47, மலைவீதி தெரு,**
வேலாயுதம்பாளையம்,
கரூர் மாவட்டம் - 639 117.

★ ரூ.50 பரிசு பெறுபவர்
**க.நா.இராஜேஸ்வரன்,**
தெற்கு வீதி, மொரட்டுப்பாளையம்
அஞ்சல், ஈரோடு மாவட்டம்.

# கிராமம் நகரம் மாநகரம்



16

*இத்தனைக்குப் பிறகும்*
*அழாமல் இருந்தோம்*
*அழுகை வராமலில்லை*
*ஒரு வைராக்கியம்*
*உங்கள் முன்னால் அழக்கூடாது*
*- மனுஷ்யபுத்திரன் ('இடமும் இருப்பும்' தொகுப்பிலிருந்து)*

வாழ்ந்து கெட்ட வீடுகளிலிருந்து ஒரு வலி மெல்லக் கசிந்து காற்றில் பரவி நிலையற்று அலைவதை எப்போதாவது சந்தித்திருக்கிறீர்களா? கிராமத்தில் வாழ்ந்த சொந்த வீட்டை பூனைகள் உறங்கவும், அரச மரச் செடிகள் சுவர் வழி வேர் விட்டு வெடித்துக் கிளம்பவும் விட்டு விட்டு, மாநகரத்து வீதிகளில் பசியுடன் அலையும் கண்கள் நடுநிசியில் உங்களை அலைக்கழித்ததுண்டா? கதவு, ஜன்னல், பாத்திரங்கள் என விற்ற பின்பு, கையிருப்புக் கரையக் கரைய, மாநகரத்து சிக்னல் கம்பங்களுக்கருகே சிவப்பு விளக்கு விழும் வரை காத்திருந்து, ஓடி வந்து வாகனங்களுக்கிடையே நுழைந்து தொப்பியும், கண்ணாடியும் விற்பவர்களில் உங்கள் தூரத்து உறவினர்களின் சாயல் கண்டு துடித்ததுண்டா? காலம், மைதானத்தில் விளையாடுபவனை பார்வையாளனாகவும், பார்வையாளனை பரிசு வெல்பவனாகவும் மாற்றி விடுகிறது.

பத்து வருடங்களுக்கு முன்பு அவனைச் சந்தித்தேன். அவன் பெயர் எனக்கு மறந்துவிட்டது. அணு அணுவாய் அவன் உருவம் அந்தத் தருணத்தின் சோகத் துகள்களுடன் உள் நெஞ்சில் பதிந்து விட்ட பின், பெயரா முக்கியம்? அப்போது நான் இயக்குநர் அருண்மொழியிடம் உதவி இயக்குனராக வேலை செய்து கொண்டிருந்தேன். ஒவ்வொரு நொடியும் இருபத்து நான்கு ஃபிரேம்களாக நகர்ந்து கொண்டிருந்த காலம் அது.

இயக்குநர் அருண்மொழி 'ஏர்முனை', 'காணிநிலம்' ஆகிய படங்களை இயக்கி தேசிய விருது பெற்றவர். அப்போது அவர் எழுத்தாளர் அசோகமித்திரனின் 'கரைந்த நிழல்கள்' நாவலைப் படமாக எடுத்துக் கொண்டிருந்தார். என்னுடைய வகுப்புத் தோழன் ராஜராஜனின் தந்தை டி.எம்.சுப்பிரமணியமும், அவர் தம்பி டி.எம்.சுந்தரமும் தான் அப்படத்தின் தயாரிப்பாளர்கள். இலக்கிய ரசனையும் நல்ல சினிமா மீது ஆர்வமும் கொண்ட குழு அது. 'கரைந்த நிழல்கள்' சினிமாவைப் பற்றி தமிழில் வெளிவந்த முக்கியமான நாவல். நேசித்த நாவல் படமாக்கப்படுவதை பரவசத்துடனும் சினிமா என்னும் ராட்சச கனவுத் தொழிற்சாலையில் காலடி வைத்துவிட்ட குறுகுறுப்புடனும் அலைந்த வசீகர நாட்கள் அவை. அப்படிப்பட்ட ஒரு நாளில் தான் அவனைச் சந்தித்தேன்.

விஜயா வாஹினி ஸ்டூடியோவில் ஒரு காட்சியைப் படம் பிடித்துக் கொண்டிருந்தோம். தேநீர் இடைவேளையில் கையில் பேடுடன் நான் இருந்தபோது, "நீங்க அஸிஸ்டென்ட் டைரக்டர் தானே?" என்றபடி அவன் வந்தான். இருபது வயதிருக்கும். கசங்கிய உடைகள், பஞ்சடைந்துப் போன கண்கள். வியர்வையில் நனைந்து சூழலுக்குப் பொருத்தமற்று நின்றிருந்தான். "நேத்து காலையிலிருந்து சாப்

# நா.முத்துக்குமார்

பிடலை சார்... ஏதாவது வேஷம் வாங்கிக் கொடுங்க... ஒரு பத்து ரூபா கிடைச்சாக் கூடப் போதும் சார்'' என்றான். ''நடிக்கிறது கஷ்டம். வேணும்னா புரொடக்ஷன்ல சாப்பிட்டுட்டுப் போங்க'' என்றேன். ''இல்ல சார் ஓசிச் சாப்பாடு வேணாம்.'' என்று சொல்லிவிட்டு விறுவிறுவென்று நடக்கத் தொடங்கினான்.



எனக்கு அவன் வைராக்கியம் பிடித்திருந்தது. அவனை இயக்குநரிடம் அறிமுகப்படுத்தி, ஒரு சின்ன வேடம் வாங்கிக் கொடுத்தேன். ஒரு திரைப்படத்தின் முதல் நாள் பூஜை நடக்கும் காட்சி. அந்தப் படத்தின் இயக்குநருடைய தம்பியிடம், நாவலின் முக்கியக் கதாபாத்திரத்தை எடிட்டிங் உதவியாளர் ஒருவரிடம் அறிமுகப்படுத்தி ''இவரு கானா தானாகிட்ட வேலை செஞ்சவரு. டைரக்டருகிட்ட ஒர்க் பண்ணனும்னு பிரியப்படுறாரு'' என்று சொல்ல வேண்டும். அதற்கு அவர் ''அப்புறம் பார்க்கலாம்'' என்பார். இதுதான் காட்சி. எடிட்டிங் உதவியாளனாக அவனை நடிக்க வைக்க ஏற்பாடாயிற்று. நான்கைந்து முறை வசனத்தைச் சொல்ல வைத்துப் பார்த்தோம். திருப்தியாக இருந்தது. திரைப்படத்தின் பூஜைக் காட்சி என்பதால் ஆப்பிள், சாத்துக்குடி, வாழைப்பழம், இனிப்பு வகை என நான்கைந்து பெரிய தாம்பாளத் தட்டுகளில் சுவாமி படத்தின் முன்பு வைக்கப்பட்டிருந்தன. அதனருகில் தான் மேற்சொன்ன காட்சி எடுக்க வேண்டும்.

நடிகர்கள் தயாராகி நிற்க, ஒளிப்பதிவாளர் வெளிச்சம் சரி பார்த்து 'ஓகே' என்று சொல்ல, இயக்குநர் 'ரெடி டேக்' என்றார். எல்லோரும் சரியாகச் செய்ய, அவன் முறை வந்தபோது, ''இவரு... இவரு... கானா தானா கிட்ட.... வேலை... வேலை...'' என்றான். 'கட், கட்' என்று சொல்லிவிட்டு ''என்னப்பா சொதப்புற?''

என்று அலுத்துக் கொண்டார் இயக்குநர். "சாரி சார், இப்ப சரியா பண்ணிடுறேன்". "ஓ.கே லைட்ஸ் ஆன் டேக்". மீண்டும் சொதப்பினான். கிட்டத்தட்ட ஏழெட்டு டேக்குகளாயிற்று. இயக்குநர் என்னை முறைத்தார். "இல்ல சார், என்னால முடியல. வேற யாரையாவது நடிக்க வைச்சிடுங்க" என்று சொல்லிவிட்டு அவன் செட்டை விட்டு அழுது கொண்டே ஓடினான். நான் அவனைப் பின் தொடர்ந்து சென்றேன். ஒரு தெலுங்குப் படத்தின் பாடலுக்காக செட் போடப்பட்டிருந்த காகித சொர்க்கத்தில் அமர்ந்து, அழுது கொண்டிருந்தான்.

நான் மெல்ல நெருங்கி அவன் தோளைத் தொட்டு "என்னப்பா, என்ன ஆச்சு?" என்றேன். குலுங்கிக் கொண்டே சொன்னான் "எங்க குடும்பம் பெரிய குடும்பம் சார். தஞ்சாவூர்ல ஐந்நூறு ஏக்கர் நிலம் இருந்துச்சு சார். இரண்டு தெருவ இணைச்சா மாதிரி வீடு. திண்ணையிலேயே நூறு பேர் தங்கலாம். அப்பாவோட சீட்டாட்டப் பழக்கத்தில எல்லாம் போயிடுச்சு. குடும்பத்தோட மெட்ராஸுக்கு வந்து கஷ்டப்படுறோம். தங்கச்சிங்க எக்ஸ்போர்ட் வேலைக்குப் போகுதுங்க..!" அழுது கொண்டிருந்தான். "அது சரி, நடிச்சா காசாவது கிடைச்சிருக்குமே" என்றேன். "இல்ல சார், கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி தட்டுல ஆப்பிள், சாத்துக்குடி, ஸ்வீட்டுனு நிறைய வைச்சிருந்தீங்க". "ஆமா அதுக்கென்ன" என்றேன். "என் கண் முன்னாடியே ஒருத்தர் அந்தத் தட்டு மேல மண்ணெண்ணெய ஊத்துனாரு.. என்னால தாங்க முடியல... எங்க வீட்டுல யாருமே இரண்டு நாளா சாப்பிடல சார்... இங்க என்னடான்னா..!" உரையாடலை முடிக்காமல் அழுது கொண்டிருந்தான். எனக்கு விஷயம் விளங்க ஆரம்பித்தது.




சினிமாவில் இதைக் கன்ட்டினியூட்டி என்பார்கள். ஒரு ஷாட்டில் வைக்கப்படும் பொருள்கள் அடுத்த ஷாட்டிலும் அதே இடத்தில், அதே வடிவத்தில் இருக்க வேண்டும். உதாரணமாக இன்று எடுக்கப்பட்ட காட்சிகளின் பின்னணியாக பத்து ஆப்பிள்கள் இருந்தன என்றால், இதன் தொடர்ச்சியாக அதே காட்சியை அடுத்த வாரம் வேறு இடத்தில் எடுப்போம். அப்போது ஆப்பிளுக்குப் பதில் வாழைப் பழம் மட்டும் இருந்தால், படம் பார்க்கையில் உறுத்தும். உணவுப் பொருள்கள் என்பதால் தெரியாமல் யாராவது சாப்பிட்டு விடக் கூடும். அதற்காக அதன் மேல் மண்ணெண்ணெய் ஊற்றுவார்கள். அவனிடம் விளக்கிச் சொன்னேன்.

"இருக்கட்டும் சார்... அதுக்காக மண்ணெண்ணெய் ஊத்துவாங்களா... நாங்க இரண்டு நாளா சாப்பிடல சார்..!" கைகள் நடுங்க அழுது கொண்டிருந்தான். "சரி பரவாயில்ல இந்தாங்க" என்று அவன் கையில் இருபது ரூபாயைக் கொடுத்தேன். "வேணா சார்" என்று சொல்லிவிட்டு, வாசலை நோக்கி வேகமாக நடந்து காணாமல் போனான்.

அதற்கப்புறம் செய்தித் தாள்களில் 'வறுமை காரணமாக குடும்பத்துடன் தற்கொலை' என்று படிக்கையில் புகைப்படத்தில் அவன் முகம் இருக்கிறதா என்று பதைபதைப்புடன் பார்ப்பேன்.

இன்றைக்கும் மாநகரத்தில் ஒவ்வொரு சினிமாக் கம்பெனி வாசலிலும் நூற்றுக் கணக்கான இளைஞர்கள் எதற்காகவோ காத்துக் கொண்டிருப்பதைக் கவனிக்கிறேன். அவர்களுடைய முகங்களில் அவன் முகத்தின் சாயலின் துகள்கள் படிந்திருப்பதைப் பார்க்கையில் பயமாயிருக்கிறது.

(மீண்டும் சந்திப்பேன்)

படம் : ஸ்ரீஹரி



# தமிழக அரசு எங்கள் டெண்டரை ஏற்காதது ஏன்?

சென்னை மீஞ்சூர் அருகே கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டத்தைச் செயல்படுத்த முனைந்த தமிழக அரசின் நடவடிக்கைக்கு பிரேக் போட்டிருக்கிறது உயர்நீதி மன்றம். காரணம்? தமிழக அரசு முதலில் டெண்டர் கோரியபோது, க்ருனிசேவ் மாநில ஆய்வு மற்றும் விண்வெளி உற்பத்தி மையம் என்ற ரஷ்ய நிறுவனமும், மார்சன் என்ற பிரான்சு நாட்டு நிறுவனமும் விண்ணப்பித்தன. சில நடைமுறைக் குறைகள் இருந்ததால் பிரான்சு நாட்டு நிறுவனத்தின் டெண்டர் பரிசீலிக்கப்பட வில்லை. "இந்த நிலையில் எங்கள் டெண்டரை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால் மெட்ரோ குடிநீர் வாரியம் மறுடெண்டர் கோரியுள்ளது. எங்கள் டெண்டர் பரிசீலிக்கப்படவில்லை" என்று உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்த மனுவில் ரஷ்ய நிறுவனம் சொல்லியிருக்கிறது. அந்த மனுவின் சுருக்கம் இது:

கடல்நீரைக் குடிநீராக்கும் தொழில் நுட்பத்தில் கடந்த அறுபது ஆண்டுகளாக ஈடுபட்டிருக்கிறோம். சென்னைப் பெருநகர குடிநீர் மற்றும் கழிவுநீர் வாரியம், மீஞ்சூரில் அமைக்க இருக்கும் கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டத்துக்கு ஒப்பந்தப்புள்ளி கோரிய போது விண்ணப்பித்தோம். திட்ட மதிப்பீடு 1700 கோடி. முறையான டெண்டரை பிரான்சு நிறுவனம் தாக்கல் செய்யாத நிலையில், எங்களது டெண்டர் மட்டுமே பரிசிலிக்கத்தக்க நிலையில் இருந்தது. ஆயிரம் லிட்டர் கடல்நீரைக் குடிநீராக்க நாங்கள் குறிப்பிட்ட தொகை நாற்பது ரூபாய்க்கும் குறைவாகும்.

எங்களுடையது ரஷ்ய அரசுத் துறை நிறுவனம். விண்வெளி ஆய்வு, பாதுகாப்புத் துறைகளில் இந்திய நாட்டுக்குப் பணி செய்திருக்கிறோம். எனவே முன் வைப்புத் தொகையிலிருந்து விலக்கு கேட்டோம்.

"முன் வைப்புத் தொகை வற்புறுத்தப்பட மாட்டாது" என்று சம்பந்தப்பட்ட அதிகாரிகள் வாய்மொழியாக உறுதியளித்தார்கள். முன் வைப்புத் தொகையை ஈடுகட்டுவது போல, ரஷ்யத் தூதரிடமிருந்து ஓர் உறுதிமொழிக் கடிதமே அவர்கள் ஆலோசனைப் படி பெற்றுத் தந்தோம். இந்த நிலையில், முன் வைப்புத் தொகையைக் கட்டாததினாலும், ஒரே ஒரு டெண்டர் மட்டுமே வந்துள்ளபடியாலும், மெட்ரோ வாரியம் எங்கள் டெண்டரை நிராகரிப்பதாகக் கேள்விப்பட்டோம்.

இது சம்பந்தமாக தமிழக முதல்வருக்கு இரண்டு கடிதங்கள் எழுதினோம். ஆனால் ஒரு பதிலுமில்லை. இந்த நிலையில் செப்டம்பர் மாதம் இருபத்தி இரண்டாம் தேதி அன்று, மறுடெண்டர் கோரி பத்திரிகைகளில் விளம்பரம் வெளியிட்டிருக்கிறது மெட்ரோ வாரியம். இந்தச் சூழலில் எங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்கு நிவாரணம் கோரி உயர்நீதிமன்றத்தை நாடுவதைத் தவிர, வேறு வழியில்லை.

க்ருனிசேவ் நிறுவனத்தின் வேண்டுகோளைப் பரிசீலித்து, 'மறுடெண்டர் கோரினாலும், அதன் மேல் எந்த முடிவும் எடுக்கக் கூடாது' என்று மெட்ரோ வாரியத்துக்கு இடைக்காலத் தடை விதித்திருக்கிறார் உயர்நீதிமன்ற நீதிபதி கே. கோவிந்தராஜன். தமிழக அரசுக்கும் நோட்டீஸ் அனுப்பப்பட்டிருக்கிறது.

மறுடெண்டருக்கு பத்து நிறுவனங்கள் ஒப்பந்தப் புள்ளி கொடுத்திருப்பதாகத் தமிழக முதல்வர் சட்டசபையில் அறிவித்திருக்கிறார்.

- சஞ்சயன்

**- உயர்நீதிமன்றத்தின் கதவைத் தட்டிய ரஷ்ய நிறுவனம்!**

## நேற்று...இன்று...நாளை...

# செல்லமாக வளரும் டைனசார்!

அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ் ஜப்பானுக்குச் சென்றிருந்தபோது அவருக்கு ஜப்பானியப் பிரதமர் ஒரு நாய்க்குட்டி பரிசளித்தார். ரோபோ நாய் குட்டி! இந்த செல்லக் குட்டி, நடக்கும், உட்காரும், படுக்கும், வாலாட்டும், தடவிக் கொடுத்தால் கொஞ்சிக் குலவும். எஜமானரின் குரலுக்குக் கீழ்ப்படியும். 'குதி' என்றால் குதிக்கும், 'பேப்பர் கொண்டு வா' என்றால் கவ்விக் கொண்டு வரும்! அமெரிக்க அதிபர் வீடு திரும்ப விமானம் ஏறியதுமே, ரொம்ப ஆவலுடன் நாய்க்குட்டியிடம் பேசிப் பார்த்தார். அது நகரவில்லை! அப்புறம்தான் புரிந்தது. அந்த ரோபோ நாய்க்குட்டிக்கு ஆங்கிலம் தெரியாது; ஜப்பானிய மொழியில்தான் அதனுடன் பேச வேண்டும் என்று! ஆக, ஜப்பானியரின் மொழிப்பற்றைப் போற்றுவதா, அல்லது அமெரிக்க அதிபருக்குத் தரப்பட்ட பரிசு, அவருக்குப் பயன்படுமாறு செய்யத் தவறிய கவனக்குறைவைக் கண்டிப்பதா?



* * *

அமரர் கல்கி 'ஜிம்மி' என்று செல்லப் பெயரிட்டு ஒரு நாய் வளர்த்து வந்தார். ஒரு சமயம் அது வீட்டின் மாடிப்படி திருப்பத்தில் ஒரு மூலையில், குட்டிகள் போட்டுவிட்டது. 'கல்கி' அவர்களைக் காண தினமும் பல பேர் வருவார்கள். அவர்கள் மாடிப் படிகளில் ஏறினால் ஜிம்மி உறுமும்; பயங்கரமாகப் பற்களைக் காட்டும்! வேறு வழியின்றி தமது ஆஸ்துமாவையும் பொருட்படுத்தாமல், 'கல்கி' தாமே கீழிறங்கி வந்து நண்பர்களைக் காண வேண்டியிருந்தது. மேலும் கீழுமாக ஒரு நாளைக்கு எட்டுத் தடவை ஏறி இறங்க நேர்ந்த போதிலும், ஜிம்மி மீது அவருக்குக் கோபமே இல்லை; ரொம்பப் பெருமைதான்! மாடி ஏறும் போதும் இறங்கும்போதும், குட்டிகளைப் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியில் திளைத்தார்.

* * *

மேற்கு ஜப்பானில் ஒரு நகரில் தேள் வளர்த்துக் கொண்டிருந்தார் ஒருவர். அது ஒரே சமயத்தில் ஐம்பது குட்டிகளைப் போட்டுவிட்டது! உருவில் மிகச் சிறிய அவை தப்பிச் சென்று, கட்டடம் முழுவதிலும் இருந்த பல ஃபிளாட்டுகளுக்குப் பரவிவிட்டன. விஷயம் தெரிய வர, எல்லோரும் பயந்து நடுங்கி குடியிருப்பைக் காலி செய்து, சற்றுத் தொலைவில் இருந்த ஓட்டலில் அறையெடுத்துத் தங்கினார்கள். எல்லாத் தேள்களும் பிடிபட்ட பின்னர்தான் திரும்பினார்கள்!



• பிரைமோ புயல் பொம்மை

* * *

சிறு வயதில் நான் கிராமத்தில் சில காலம் வசித்த போது, ஓட்டுக் கூரையிலிருந்து தேள்கள் அவ்வப்போது பொலபொலவென்று உதிரும்! என் பெரியப்பா சாவிக் கொத்தில் பேனாக் கத்தி மாட்டி வைத்திருப்பார். தேனைக்



கண்டதும் கத்தியை விரித்து லாகவமாக அதன் கொடுக்கை நறுக்கி விடுவார். அது தப்பினோம் பிழைத்தோம், என்று ஓடி விடும். தேளைக் கொல்ல அவருக்கு மனசே வராது. ஒரு சமயம் அவர் உள்ளங்கை அகலத்துக்கு பெரிய நண்டு வாக்களி வந்து விட்டது. இதன் கொடுக்கை பேனாக்கத்தியால் நறுக்கும்போது நிச்சயம் கொட்டிவிடும் என்று நினைத்தேன். ஆனால் பெரியப்பாவோ இதற்காகவே ஒரு தோசை திருப்பியை வாங்கி, கூர்தீட்டித் தயாராக வைத்திருந்தார்!

* * *

**க**ண்ணாடித் தொட்டியில் ஓரிரு மீன்கள் வளர்த்து தினம் அதைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தால், தியானம் செய்வதற்கு ஈடான மன அமைதி கிடைக்கும். நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது அதையும் வளர்த்துப் பார்த்தேன். துரதிர்ஷ்டவசமாக பத்து நாட்கள் கழித்து எல்லா மீன்களும் ஒரே சமயத்தில் உயிரைவிட்டு, என் மன அமைதியை அடியோடு கெடுத்துவிட்டன!

* * *

**உ**ங்க வீட்டில் ஏதாவது செல்லப் பிராணி வளர்க்கறீங்களா? அதுபற்றி வேடிக்கையான ஆச்சர்யமான சம்பவம் ஏதும் உண்டா? செம்பியன் மேற்பார்வைக்கு கல்கி, சென்னை - 600 097 என்று விலாசமிட்டு எழுதுங்கள். இந்தப் பகுதியில் இடம் ஒதுக்குகிறேன். பிராமிஸ்!

* * *

**சி**றுவர்களுக்கு ரோபோ பொம்மைகள் செய்துவந்த ஒரு ஜப்பானிய நிறுவனம் இப்போது பெரியவர்களுக்காகவும் தயாரிக்கிறது. பெருநகர்களுக்கு வேலை தேடி வரும் பல இளைஞர்கள், யுவதிகளை தனிமை வாட்டுகிறதாம். அவர்களுக்கு வீட்டில் செல்லப் பிராணி வளர்ப்பதைவிட ரோபோ வைத்துக் கொள்வது வசதி! பேச்சுத் துணையற்ற வயதானவர்களுக்கோ, இந்த ரோபோக்கள் வரப் பிரசாதம்! இதனால் 'பிரைமோ புயல்' என்ற ரோபோ பொம்மை, லட்சக் கணக்கில் விற்பனையாகிறது. ஐந்து வயதுக் குழந்தையின் குரலில் இருநூற்றியென்பது சிறு வாக்கியங்கள் பேசுகிறது. ஜப்பானியர் இதனைக் கொஞ்சி மகிழ்ந்து, பிக்னிக்குக்கு அழைத்துப் போய், அது கோபித்துக் கொண்டால் சமாதானப்படுத்தி, படுக்க வைத்து, கதை சொல்லி தூங்கப் பண்ணுகிறார்கள்!

* * *

**மி**ருதங்க வித்வான் உமையாள்புரம் சிவராமன் இல்லத்துக்கு ஒரு சமயம் நானும் என் மனைவியும் போயிருந்தோம். கேட்டைத் திறக்குமுன் என் மனைவி "அபிராமி!" (ஸ்ரீமதி சிவராமன்) என்று குரல் கொடுத்தாள். கேட்டைத் திறந்தாளோ இல்லையோ, ஒரு பிரும்மாண்டமான நாய் எங்கிருந்தோ தோன்றி, தன் முன்னங்கால்களை என் மனைவியின் தோள்மீது தூக்கி வைத்துக் கொண்டு, பற்களைக் காட்டியது. என் மனைவி எப்படி

# செம்பியன்

பயத்தில் மயங்கி விழாமல் இருந்தாள் என்பது ஒரு பக்கமிருக்க, நான் சப்தநாடியும் ஒடுங்கிப் போய் நின்றேன். நல்லவேளையாக "யாரது?" என்று கேட்டுக் கொண்டே அபிராமி எட்டிப் பார்த்தாரோ, எங்களுக்கு திரும்பவும் மூச்சு வந்ததோ!

* * *

**எ**திர்காலத்தில் வீட்டிலே வளர்க்கப்படும் செல்லப்பிராணி எதுவாக இருக்கும்? டைனசார் என்றால் நம்பித்தான் ஆக வேண்டும்! ஆலமரத்தைக்கூட தொட்டியில் வளர்க்கும் போன்ஸாய் கலை தெரியுமில்லையா? அதுபோல, பலவகையான டைனசார்களின் சிறிய வடிவங்கள் தயாரிக்கப்பட்டு விற்பனைக்கு வருமாம்! பயோடெக் விஞ்ஞான வளர்ச்சி இதனைச் சாத்தியமாக்கும் என்கிறார்கள். இந்த மினி டைனசார்கள் நாளடைவில் வளர்ந்து ஆளை விழுங்கி ஏப்பம் விடாது என்று உத்தரவாதமும் அளிக்கிறார்கள். எனக்கென்னவோ சந்தேகமாகத்தான் இருக்கிறது. ஒரே ஆறுதல், அந்த நாள் வரும்போது அதை பரீட்சித்துப் பார்க்க நாம் இங்கு இருக்க மாட்டோம்!

* * *

**அ**மெரிக்காவில் செல்லப் பிராணிகள் தினம், ஆண்டு தோறும் கொண்டாடுகிறார்கள். அதையொட்டி

இதோ ஒரு ஜோக்.



மதுரை ஷெனாய் நகரில் அட்சய குமாரவத ஆஞ்சநேயர் கோயில் உள்ளது. இங்கே தயிர்சாதக் கட்டளை செய்து, பிரார்த்தனை செய்து கொண்டால் திருமணம் கைகூடுகிறது. ஒரு தூக்கில் தயிர் சாதம் வைத்து ஆஞ்சநேயரின் தண்டத்தில் கட்டி விடுகிறார்கள். அதை ஆஞ்சநேயர் சாப்பிட்டுவிட்டு, மாப்பிள்ளைத் தேடப் போவதாக ஐதீகம்.

**-வி.சகுந்தலா வைகுண்டம், மதுரை- 20.**

கண்ணகிக்கு மதுரையில் ஒரு கோவில் இருக்கிறது. ஆனால் கண்ணகி கோயில் என்று கேட்டால் யாரும் வழி சொல்ல மாட்டார்கள். 'செல்லத்தம்மன் கோவில்' என்று கேட்க வேண்டும். மதுரையில் உள்ள கண்ணகிக் கோவிலுக்கு அதுதான் பெயர்.



தெற்கு - திருப்பரங்குன்றம் - தியாகராசர் பொறியியல் கல்லூரி.

வடக்கு - ஆனைமலை - வேளாண்மைக் கல்லூரி.

கிழக்கு - மாரியம்மன் தெப்பக்குளம் - தியாகராசர் கலைக் கல்லூரி.

மேற்கு - நாகமலை அடிவாரம் - வெள்ளைச்சாமி நாடார் கலைக் கல்லூரி.

வரிச்சூர் ரோடு வழியாக மதுரைக்குள் நுழையும்போது, மருத்துவக் கல்லூரி.

திண்டுக்கல் வழியாக வந்தால், ஃபாத்திமா பெண்கள் கலைக் கல்லூரி.

திருமங்கலம் ரோட்டில் வந்தால், புகழ் பெற்ற மதுரை கலைக் கல்லூரி.

அழகர் கோயில் ரோடு வழியே வரும்போது - அமெரிக்கன் கலைக் கல்லூரி, மீனாட்சி பெண்கள் கலைக் கல்லூரி.

இப்படி நகரத்தின் எல்லாத் திசைகளிலும் கல்லூரிகளை எல்லைகளாகக் கொண்ட கல்வி நகரம் மதுரை.

**- கிருபா சீனி**
**வாசன், மதுரை.**



திருப்பரங்குன்றத்தை அடுத்து உள்ள தென்பரங்குன்றம் வனப் பகுதியில், ஏராளமான



மயில்களும் குரங்குகளும் வசிக்கின்றன. கருணையுள்ளம் கொண்ட பாண்டி என்ற ஆட்டோ டிரைவர், தமது சொந்தச் செலவில் தினசரி பழங்கள் வாங்கிக் கொடுக்கிறார். பிராணிகள் நலச் சங்கத்தினரோ, சமூக சேவை அமைப்புகளோ, பாண்டியைக் கௌரவிக்கலாமே?

**- எஸ். சீனிவாசன், மதுரை - 10.**

மதுரையில் ஓடும் ஒரு வாய்க்காலின் பெயர்: கடுதண்ணீர் வாய்க்கால்!



# மதுரை வாசகர்கள் தரும் மினி செய்திகள்

**ம**துரை கீழமாசியில் உள்ள மொட்டைப் பிள்ளையார் கோவில் பிரசித்தி பெற்றது. இங்குள்ள வியாபாரிகள் அனைவரும் இந்தப் பிள்ளையாரை வணங்கி, பின்னர்தான் கடைகளைத் திறப்பார்கள்.

**- வீ. வீரமுடி, மதுரை - 11.**

**மீ**னாட்சி அம்மன் கோவில் தெற்குக் கோபுரத்தை ஒட்டிய சொக்கப்ப நாயக்கன் தெருவில் ரமணாஸ்ரமம் உள்ளது. பள்ளி மாணவனாக இருந்த ஸ்ரீரமணர் வசித்த இல்லத்தைப் புதுப்பித்து, தியான நிலையம் அமைத்துள்ளார்கள். ஸ்ரீரமணர் படித்தது இங்குள்ள யூனியன் கிறிஸ்துவப் பள்ளியில். அப்போதுதான் ஆத்ம ஒளி பெற்று அவர் திருவண்ணாமலைக்குச் சென்றார்.



**ம**துரையில் பழம்பெரும் கல்விக்கூடமான சேதுபதி உயர்நிலைப் பள்ளியில்தான் பாரதியார் தமிழ் ஆசிரியராக, ஆறு மாதம், ஆறு நாள் பணி புரிந்தார். பள்ளி நுழைவாயிலில் அவரது உருவச்சிலை நம்மை வரவேற்கிறது. பிற்காலத்தில் இதே பள்ளியில் பிரபல எழுத்தாளர் நா. பார்த்தசாரதி தமிழாசிரியராகப் பணிபுரிந்தார் என்பதும், அவரும் ஆறு மாதம்தான் வேலை பார்த்தார் என்பதும் சுவையான தகவலாகும்.

**ம**துரை என்றாலே 'மீனாட்சி ராஜ்யம்' என்று பேசப்படும். பெண்கள் கல்லூரி முதல் பொட்டுக்கடலை வியாபாரம் வரை மீனாட்சி பெயரிலேயே நடக்கிறது. சித்திரைத் திருவிழாவின்போது, மீனாட்சிக்கு முடிசூட்டு விழாவும், அடுத்து ஆவணி மூலத் திருவிழாவின்போது சொக்கநாதருக்குப் பட்டாபிஷேகமும் நடைபெறும். இந்தக் கணக்குப்படி - ஆண்டில் எட்டு மாதங்கள் ஸ்வாமியும், நான்கு மாதங்கள் அம்பாளும் ராஜ்யபாரம் தாங்குவதாக ஐதிகம். ஐதிகத்தை மீறிய சக்தி அம்மனுக்கு!



**ம**துரையில் பற்பல தலைமுறைகளைக் கண்ட புகழ்மிகு நிறுவனங்கள் - ஹாஜிமூசா ஜவுளிக்கடை, ராஜாபார்லி பிஸ்கட் ஸ்டால், மேலக் கோபுரத்தை ஒட்டிய நாகப்பட்டினம் மிட்டாய்க் கடை, கோபி அய்யங்கார் ஹோட்டல்.

**எம்.**எஸ். சுப்புலக்ஷ்மி, மதுரை சோமு, மதுரை மணி அய்யர், டி.ஆர். மகாலிங்கம், டி.எம். சௌந்தரராஜன், பாரதிராஜா, வைரமுத்து, எம்.என்.ராஜம், விஜயகாந்த், வடிவேலு, பாண்டியன், விவேக் போன்ற கலைச் செல்வங்களைத் தந்தது மதுரை மாவட்டம்தான்.

**- பெ. சங்கரன்,**
**சென்னை - 5.**

**ம**துரை ஞான ஒளிபுரத்தில் உள்ள ஒரு பகுதியின் பெயர் 'தேம்பாவணி'.



இத்தாலியிலிருந்து இங்கு வந்து தமிழ் கற்றுப் பெரும் புலமை பெற்ற வீரமாமுனிவர் இயற்றிய காவியத்தின் பெயர் 'தேம்பாவணி'.

இந்தப் பகுதியில் வசிக்கும் வி.ஐ.பி., பட்டிமன்ற சூப்பர் ஸ்டார் சாலமன் பாப்பையா.

**- இளங்கோ, மதுரை.**

# குறையொன்றுமில்லை

பரம பக்தி உடையவனுக்கு பக வானைப் பிரிகிற துன்பம் தாளவொண் ணாததாக இருக்கும். துளி நேரம் அவனை நினைக்காது போனாலும் வியசனம் உண்டாகும். அதைப் படிக்கவில்லையே, இதைப் பண்ணவில்லையே என்று பதறுகிற பதறலில், வேறு எந்த வேலையும் ஓடாது. பெரிய பயப் பிராந்தி ஏற்பட்டு விடும். அந்த மாதிரி ஒரு நிலையிலே கொண்டு போய் விட்டு விடும், அவனுடைய பர பக்தி, பர ஞான பரம பக்தி.

'இரண்டும் மூன்றுமாக பகவான் இருக்கிறான்' என்று சொன்னதில், மூன்று என்று குறிப்பிட்டது இந்த மூன்றையும் தான்.

அடுத்தது 'ஏழும், ஆறும் எட்டுமாய்...' ஏழு என்பது என்ன...?

பக்தி சித்திப்பதற்கு ஏழு சாதனங்கள் வேண்டியிருப்பதாக சாஸ்திரமானது வலி யுறுத்துகிறது.

விவேகம் என்பது ஒன்று. விமோகம் என்பது ஒன்று, அப்யாஸம் என்று ஒன்று, க்ரியா, கல்யாண, அனுத்தர்ஸம், அனதஸா தனம் - இந்த ஏழும் இருந்தால்தான் பக்தி சித்திக்கும் என்று சாஸ்திரம் சொல்கிறது.

விவேகம் என்பது என்ன...? தர்மா - தர்மங்கள் குறித்த ஞானம். சரீர சக்தி, மனஸ் சக்தி, வாக் சக்தி - இதையெல்லாம் விவேகவான்கள் தேடிக் கொள்வார்கள்.

விமோகம் என்பது என்ன...? மற்றதிலே பற்றில்லாமல் பகவத் விஷயத்திலே பற்று கொள்ளுதல் விமோகம்.

அப்யாஸம் என்பது இந்த முதல் இரு குணங்களை இடை விடாது கடைப்பிடித்து வருதல்.

க்ரியை என்றால் அதற் குண்டான காரியங்களைச் செய்தல் - எப்போதும் பகவத் விஷயத்திலேயே ஈடுபடும் படியான காரியத்தைச் செய்தல்.

கல்யாண - என்பது பகவானுடைய திருக் கல்யாண குணங்களை எப்போதும் சிந்தனை பண்ணிக் கொண்டே இருப்பது.

அந்த பகவானின் திருக்கல்யாண குணங்கள் ஒவ்வொன்றும், நம்மை இழுத்துக் கொண்டே போய்விடும். ஒரு குணத்தை அனுபவித்து முடித்தாலல்லவா, எல்லா குணங்களையும் அனுபவிப்பது குறித்து யோசிக்கலாம்! எல்லா குணங்களும் ஏற்றமுடையவை. எப்போதும் அவற்றையே சிந்தனை பண்ணிக் கொண்டிருப்பது ஐந்தாவது அம்சம்.

ஆறு, அனுத்தர்ஸம் - பசி தூக்கத்தைப் பொறுக்கும் திறன் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அவற்றிலே நாட்டம் கொள்ளக் கூடாது. 'உண்ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண் ணனே' என்று அந்த எம்பெருமானையே நினைத்திருக்க வேண்டும். பசி - தாகம் இத்யாதிக்கு இடம் கொடுக்கக் கூடாது. சோம்பலை விட வேண்டும். பகவத் விஷ யத்தில் சோம்பல் இருந்தால் முடியுமா...?

பகவானை ஸேவிக்க வேண்டுமென்றால், இப்போது போனால்தான் கதவு திறந்திருக் கும் என்னும்போது, இப்போது முடியாது; ஏழு மணிக்குத்தான் முடியும் என்று ஒருத்தர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந் தாரானால், அதற்கப்புறம் அந்த ஸேவை கிடைக்குமா...? உடனே ஓட வேண்டாமோ! ஆகையினாலே பகவத் விஷயத்தில் சோம்பலுக்கு இடமே கொடுக்கக் கூடாது.

அனதஸாதனம்- பாகவதோத்தமர் களிடத்திலே அசூயைப் படக் கூடாது. இதராளிடத்தில் பிரதிபக்தி யோடு இருக்க வேண்டும். அதிலும் நம் போன்ற பக்தர் களிடத்தில் அன்னியோன்ய ஸம்ருதாளாக 'அடியேன் அடியேன்' என்று பணிந்து, முந்தி நிற்க வேண்டும். அவ் வாறு நாம் பக்தியோடு

16

இருப்பதைத்தான் பகவான் விரும்புகிறான்.

'நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றது உன் அடிமைக் கடிமை' என்று ஆழ்வார் பாடினார். அந்த மந்திரத்தை ஜபித்து ஜபித்து, 'ஹே நாராயணா! உனக்கு நான் அடிமையாகவில்லை.... உன் அடியார்களுக்கு அடிமையானேன்!' என்று நாம் மகிழ்ச்சி கொள்ள வேண்டும்...

குலசேகர ஆழ்வார், அடியார்க்கும் அடியார்க்கும், அடியார்க்கும் அடியார்க்கும் அடியார்க்கும் அடியார்க்கும் அடியனாய் இருக்கும்படியான நிலையைச் சொல்கிறார்! 'ஸத்'துக்கள் என்பவர்களே இந்த அடியார்கள்தான்; தாஸர்கள்தான்.





''சார்... நூறு ரூபா கடனா தர முடியுமா?''

''உங்களை யாருன்னே எனக்குத் தெரியாதே!''

''தெரிஞ்சா தர மாட்டீங்களே!''

- தஞ்சை தாமு



குழந்தைக்குச் சாதம் ஊட்ட எதுக்கு கட்சி மீட்டிங்குக்குப் போறே..?''

''கதை கேட்டுக்கிட்டே சாப்பிட்டுப் பழகிட்டான்...''

- அதிரை அபூமீமா




''அமைச்சர் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாய் நோக்குகிற மனோபக்குவம் உள்ளவராம்...''

''எப்படிச் சொல்லறே?''

''பதவி நீக்கம் செய்யப்பட்டதற்கு நன்றி தெரிவித்து ஊரெங்கும் போஸ்டர் அடிச்சு ஒட்டிட்டாரு!''

- சேலம் இரா. கணேசன்

இதனால்தான் சுவாமி தேசிகன் பாதுகா சஹஸ்ரத்தில் சொல்கிறார்: 'திருவரங்கத்தில் எம் பெருமானின் திருவடியை ஸேவித்துக் கொண்டு இருக்கக்கூடிய பாகவதோத்தமர்களுடைய பாத தூளிபடுவதால் இவ்வுலகம் பாக்கியம் செய்தது!' என்றார். 'ஸத்' சப்தத்தோடு ஆரம்பித்து 'ஸத்' சப்தத்தோடேயே முடித்தார் அந்த பாதுகா சஹஸ்ரத்தை! முழுக்க முழுக்க அதிலே ஸத் பிரபாவம் தான்; பாகவதோத்தமர்களின் பிர பாவம் தான்.

நம்மாழ்வார் பிரபாவம்; பரதனுடைய பிர பாவம், எல்லாவற்றையும் காட்டினார்.

இந்த ஏழும்தான் பகவானுக்குரியவையாக அவனால் நமக்குச் சித்திக்கும் விஷயங்களாக குறிப்பிடப்பட்டுள்ளன.

**ச**ரி, ஆறு என்பது எதைக் குறிக்கிறது...?

ஞான, பல, வீர, ஐச்வர்ய, சக்தி, தேஜ: இந்த ஆறும் பகவானிடம் உள்ள குணங்கள் என்பதை நாம் உணர வேண்டும். - இந்த ஆறு குணங்களை யும் உடையவன்தான் தேடத் தகுந்தவன் என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்லியிருக்கிறது.

எவனைத் தேட வேண்டும்? என்று கேட்டால், எட்டு குணங்களைச் சொல்கிறது பகவானுக்கு:

பாபமே கலப்பில்லாதவன்.

ஜுர பயம் கிடையாது அவனுக்கு

பசி - தாகம் இத்யாதிகள் கிடையாது.

அவன் எண்ணம் வீணாவதில்லை.

அவனுடைய சங்கல்பம் பழுதுபடுவதில்லை.

- இப்படிப்பட்ட எட்டு குணங்களைக் கொண் டவன் பரமாத்மா.

ஆத்ம சப்தத்தினாலேதான் பரமாத்மாவை நமக்குத் தெரியப்படுத்துகிறது சாந்தோக்ய உப நிஷத். 'அந்த ஆத்மா தேடத் தகுந்தவன்...' என் கிறது. எந்த ஆத்மா...? எட்டு குணங்களை உடை யவன். இந்த எட்டு குணங்களை உடையவன் யார்...? பரமாத்மா! அவனை வெறும் ஆத்மா என்று நினைக்காதீர்கள்; அவன் பரமாத்மா!

வாலியினுடைய தர்ம பத்னி தாரை, இந்த எட்டு குணங்களையுடையவன் பரமாத்மா என்பதை விவரிக்கிறாள். வாலி மாண்டு கீழே கிடக்கிறபோது, அந்த எம்பெருமான் வந்து எதிரே நிற்கிறான்.... அவனைப் பார்த்துச் சொல்கிறாள் தாரை. அந்த ஒரு சுலோகத்திலே பரமாத்மாவின் எட்டு குணங்களும் வகைப் படுத்திக் காட்டப்படுகிறது. மஹா பதிவ்ரதை யான தாரை, பகவானுடைய எண் குண பிர பாவத்தை, சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப் பட்ட ரீதியில் வரிசையாக எடுத்துக் காண்பிக் கிறாள்.

என் குணத்தினனான பகவான் வேறு வேறு

ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய் இருக்கிறான் - பலப் பல போக மயக்குகள் என்றார் ஆழ்வார் - அதன்படி இந்த உலகத்திலே வேறு வேறு ஞானமாக அவனே இருக்கிறான்!

ஸ்ருதியே - வேதமே அப்படித்தான் இருக்கிறது! சிலது - பேத ஸ்ருதியாக இருக்கிறது. சிலது அபேதமாக இருக்கிறது; சிலது கடகமாக இருக்கிறது; சில பேர் ஒன்று சொல்கிறார்கள். வேறொருத்தர் இன்னொன்று சொல்கிறார். இப்படி உலகத்திலே வெவ்வேறு போக மயக்குகளை உண்டு பண்ணிவிட்டாயே... ' நெறி காட்டி நீக்குதியோ?' என்றார் ஆழ்வார்.

"எனக்கு அதைக் காண்பித்து, இதைக் காண்பித்து, நீ தூர ஒதுங்கிப் போனால் நான் விடுவேனா...? அந்த நெறிகளெல்லாம் எனக்கு வேண்டாம்! நீதான் வேண்டும்! உன்னையே சிக்கெனப் பிடித்தேன். ஏனென்றால் அதெல்லாம் ஞானத்தைப் போட்டுக் குழப்புகிறது. அதனால் சாஸ்திர ஞானம் படு கிலேசம்! அதைப் படித்துப் பார்த்தால் புத்தியைச் சலிக்கப் பண்ணுகிறது."



'எது வழி...?' என்று கேட்டான் யக்ஷன். அதற்கு தர்மபுத்திரர் பதில் சொன்னார்:

சுருதி வாக்கியம் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒரு வாக்கியம் அப்படிச் சொல்கிறது. இன்னொன்று இன்னொரு விதமாகச் சொல்கிறது. புரிந்து கொள்வதற்குள் பிரும்மப் பிரயத்தனமாக இருக்கிறது.

அது பராசர ஸ்ம்ருதி; இது யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி, மனு ஸ்ம்ருதி என்று வெவ்வேறாக இருக்கிறது. இதிலே சொன்ன மாதிரி அதிலே சொல்லவில்லை; அதிலே சொன்ன மாதிரி இதிலே சொல்லவில்லை. எல்லாமாய் புத்தியைப் போட்டுக் குழப்புகிறது. ஒரே ஒரு மஹரிஷி வந்து சொல்லியிருந்தால், அதைப் பிரமாணமாகக் கொள்ளலாம். ஏகப்பட்ட மஹரிஷிகள், அவர்கள் எல்லோரும் ஏகமாகச் சொல்லியிருக்கிறார்கள். புரிந்து கொள்வது மிகவும் சிரமமாக இருக்கிறது. அதனாலே, இது மொத்தத்தையும் தூரத்தில் தள்ளிவிடு... நம் முன்னோர்கள் எந்த வழியிலே செல்கிறார்களோ, அதுதான் நமக்கும்...

"வேண்டுவன கேட்டியே!" என்றாள் ஆண்டாள். நம்மால் எது முடியுமோ அதைத்தான் பண்ண வேண்டும். பரமாத்மாவோ வேறு வேறு ஞானமாகி நம்மை மயக்குகிறான்.

இப்படியெல்லாம் வெவ்வேறு வழிகளைக் காட்டி, 'கொஞ்சம் போய்விட்டு வரட்டுமே! இவன் பாவமெல்லாம் தீர வேண்டுமல்லவா...! அதற்காகப் போய் வரட்டுமே' என்று சற்று நேரம் நம்மை அலைக்கழிக்கிறான். திடீரென்று தன்னைக் காட்டிக் கொடுத்து விடுவானா அவன்? அப்படியிப்படிப் போய் நம்மை மயக்கி, காக்கச் செய்த பிறகு தான் காட்டிக் கொடுப்பான்.

'இந்த உன் குணத்தை நான் புரிந்து கொண்டு விட்டேன்...' என்கிறார் ஆழ்வார்.

அதற்கும் மேலே, 'மெய்யினோடு பொய்யுமாய்' அவன் இருப்பதைச் சொல்கிறார்.

சில பேருக்கு அவன் பொய்யன். வேறு சில பேருக்கு மெய்யன். யாருக்கு மெய்யன்...? விரும்பித் தொழுபவர்களுக்கெல்லாம் மெய்யன் புறமே தொழுவார்க்கெல்லாம் பொய்யன்!

அவனை ஏமாற்றுவதற்காக, 'நெடுமார்க்கு அடிமை செய்வேன் போல்' அவனைக் கருத, வஞ்சிக்கிறான் ஒருவன்.

ஆனால், பகவான் உள்ளுக்குள்ளே உட்கார்ந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறான். வேஷம் போட்டால் செல்லுமா அவனிடத்திலே...? பக்தன் மாதிரி வேஷம் போட்டு பகவானையே ஏமாற்ற வேண்டுமென்றால் முடியுமா! புறமே தொழுதார்க்கெல்லாம் பொய்யன் தான் அவன்!

விரும்பித் தொழுவார்க்கெல்லாம் மெய்யன் ஆவான்.

அவனை விரும்பி அவன் திருவடியைப் பற்ற வேண்டும்.

(வளரும்)



குல்லு மல்லு
—கதிர்
ஏய்... இந்த ஒரு டப்பாவை வாங்கவா என்னை இந்த வண்டியெல்லாம் தள்ளவைச்சே...?
என்ன இப்போ... உடம்பு கொஞ்சம் குறையட்டுமே!
எடுத்த பொருளை எடுத்த இடத்துல வைக்கணும்னு உங்க வீட்டுல உனக்குச் சொல்லித் தரலையா?
இதை நீ சாப்பிடும்போது உங்க வீட்டுல சொல்லிக் கொடுத்திருந்தா, உன் உடம்பாவது இளைச்சிருக்குமேடா.
இந்த ஜோக்குக்கு இப்பவே சிரிச்சாகணுமா?
ஆ...ஹா...! நல்ல அயிட்டமாயிருக்கு.
டப் டமார் டும்...
இதுக்குப் பேருதான் கோ-ஆப்பரேட்டிவ் சூப்பர் மார்க்கெட்டா? ஒண்ணு எடுத்தா சூப்பரா எல்லாம் விழுது.
நீதான் எடுத்தா எடுத்த இடத்துல வைக்கிற பரம்பரையாச்சே... இதெல்லாத்தையும் நீ கரெக்டா எடுத்து வைக்க, குறைஞ்சது ஒரு வாரமாவது ஆகும்! வரட்டா!

